

ஆதிசங்கரர் அருளிய

# விவேக சூடாமணி

தமிழாக்கம்

**கோ.வி. ஸ்ரீதரன்**

ஆதிசங்கரர் அருளிய

# விவேக சூடாமணி

தமிழாக்கம்

**கோ.வி. ஸ்ரீதரன்**


வெளியீடு

**கோ.வி. ஸ்ரீதரன்**

2 பேங்க் ஆப் இந்தியா காலனி,
அசோக் நகர்,
சென்னை - 600 083.

C/o M.B. விஸ்வநாதன்,
12, எஸ்.எஸ். லே அவுட்,
வீரப்ப தேவர் காலனி
பின்புறம்,
நஞ்சுண்டாபுரம் (PO),
கோவை - 641 036.

# நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| 1. | நூலின் பெயர் | விவேக சூடாமணி (தமிழ்) |
| 2. | பொருள் | தத்துவம் |
| 3. | ஆசிரியர் பெயர் | கோ.வி. ஸ்ரீதரன் |
| 4. | பதிப்பாண்டு | ஆகஸ்டு, 1999 |
| 5. | பதிப்பாளர் | ஆசிரியர் |
| 6. | உரிமை | ஆசிரியர் |
| 7. | மொழி | தமிழ் |
| 8. | படிகள் | 1500 |
| 9. | தாள் | 14.4 Kg |
| 10. | கட்டமைப்பு | அட்டைக்கட்டு |
| 11. | அச்சு எழுத்து | 14 pt |
| 12. | மொத்தப் பக்கங்கள் | 154 |
| 13. | விலை | ரூ. 45/- |
| 14. | அச்சிட்டோர் | சீதா பிரஸ்,<br>திருச்சி – 18. |
| 15. | கணிப்பொறி | ராஜ் கிராபிக்,<br>திருச்சி – 8. |
| 16. | அட்டை அமைப்பு | வெங்கெ க் மல்டி மீடியா,<br>அடையார், சென்னை. |

This book is Printed and published with the financial assistance of **TIRUMALA - TIRUPATI DEVASTHANAMS**, Under their Scheme " **AID TO PUBLISH RELIGIOUS BOOKS**"



இறையவன் கோவிந்தன் இணையடி போற்றி
எனைவழி காட்டிய குருபதம் போற்றி



சத்குரு ஸ்ரீ பூமானந்த தீர்த்தர்

நாராயணாஸ்ரம தபோவனம்

வெங்கிணிசேரி

திருச்சூர்,

கேரளா.



அருள்பொழி குருவே சரணம் தன்னை
அடி பணிந்தோர்க்கு அரும் துணையே சரணம்
கருணையின் கடலே சரணம் பிறவிக்
கடலினில் மூழ்கிக் கதறிடும் என்னை
இருளினில் நீக்கி இதமாய் முத்திக்
கரையினில் சேர்த்துக் காத்திடு வீரே
திருவிழிப் பிறக்கும் தேனருள் மழையை
ஒருதரம் பொழிந்து எனை உய்ய வைப்பீரே

ஸ்ரீ ஸ்ரீ जगद्गुरु शङ्कराचार्य महासंस्थानम् शारदापीठम्, शृङ्गेरी

PERSONAL ASSISTANT

To His Holiness Sri Jagadguru
Shankaracharya, Dakshinamnaya
SRI SARADA PEETHAM
SRINGERI-577 139 (Karnataka)



Ref. No 11267
Camp MADRAS
Date : 1.2.1982.

ஆசியுரை

To

**SRI G.V. SRIDHARAN,**
C/O Bank of India,
PONDICHERRY.

Dear Sir,

We received the translated ADI SANKARA'S "**VIVEKACHOOTAMANI**" and "**BAJA GOVINDAM**" in poetical form and placed at the lotus Feet of Their Holinesses.

Their Holinesses appreciate your efforts in bringing the book in Tamil translation which will serve as a boon to Tamil loving people.

The gracious blessings of Their Holinesses are conveyed to you for your welfare.

The sacred prasadams of Sri Sharada Chandramouliswara blessed by Their Holinesses are sent herewith

Yours sincerely,

(K M BALASUBRAMANIAN)

PERSONAL ASSISTANT TO HIS HOLINESS
SRI JAGADGURU SHANKARACHARYA
DAKSHINAMNAYA SRI SHARADA PEETHAM
SRINGERI - 577 132

## பாராட்டுரை



**வரகூர் ஸ்ரீ கல்யாண சுந்தர சாஸ்திரிகள்,**
ஓய்வு பெற்ற ஸம்ஸ்கிருதப் பேராசிரியர்,
விவேகானந்தா கல்லூரி,
சென்னை.

ஆதி சங்கர பகவத்பாதர் அவர்களின் அரிய நூல்களுள் பட்ட "விவேக சூடாமணி" "பஜ கோவிந்தம்" என்ற இவ்விரண்டு நூல்களுக்கும் சிரஞ்சீவி ஸ்ரீதரனால் செய்யப்பட்டுள்ள தமிழாக்கத்தை முழுமையும் ஒப்பிட்டுப் பார்த்ததில் முதல் நூலின் கருத்துகள் சிறிதளவும் மாறுபடாத வகையில் அணிகளை வெளிப்படுத்தும் முறையில் பல சிறப்பான எளிய நடைகளிலான பாக்களாக அது அமைந்துள்ளது. அறிய மிகவும் ஆச்சரியமாக உள்ளது. கலைவாணியின் அருளின்றி இவ்வாறு அமைவது அரிதாகும். அதிலும் இந்த இளம் வயதில் இவ்வாறு அமைவது மிகமிக அரிதாகும். இந்நூல் அவசியம் வெளியிடப்பட வேண்டிய ஒரு நூல் என்பது எனது அபிப்ராயம்.

வடமொழியறியாத பலர் இதன் மூலம் ஆசார்ய சங்கரரின் அரிய பெரிய உபதேசங்களை அறிந்து கொள்ளலாம்.

தி.நகர்
சென்னை
22-6-82

இப்படிக்கு,
பாஷ்யபாவக்ஞ
**வரகூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்**

உ
திருச்சிற்றம்பலம்
வந்தே சுந்தர பரசிவ குடிலம் சித்தேஸ்வரம் சாஸ்வதம்





ஸ்ரீ சித்தர் ஞான பீடம்
நேதாஜி நகர், கோவைப்புதூர், கோயம்புத்தூர் - 641 042
ஸ்ரீ சித்தர் ஞான பாடசாலை
சிவக்குடில்

## வாழ்த்துரை

## திருச்சிற்றம்பலம்

*இன்னல் தரும் பிறப்பி லிடைவிடா துழலுயிர்கட்*
*கிரங்கிப் பூமேல்*
*பொன்ன விருங் காலடியிற் போந்து முழு துணர்*
*ஞானப் புலவனாகி*
*மன்னுசிவ னேயிவனென் றுலக மெலா மதித்தேத்த*
*மறையின் அந்தத்*
*துன்னிய சூத் திரமுறை செய் சங்கரா சாரியன்றாள்*
*தொழுதுய் வோமே.*

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள், புராணம், நல்ல ஆகமங்கள் சொல்லும். அஞ்ஞானத்தால் உறுவது தான் பந்தம். மெய்ஞ்ஞானத்தால், அலர் கதிர்முன் இருள்போல் அஞ்ஞானம் விடப் பந்தம் அறும்; முத்தியாகும்.

சமய வாழ்க்கையின் குறிக்கோள் ஞானம் பெற்று வீடடைதலே. நம் பாரத புண்ணிய பூமியில் தோன்றிய ஞானியர் வேத நெறியிற் சென்று தாங்கண்ட உண்மைகளைச் சாத்திர தோத்திரங்களாக மன்பதை அறிந்து உய்ய அருளியுள்ளனர். அத்தகை நூல்களில் சிறந்ததொன்று ஆதிசங்கரரின் விவேக சூடாமணி.

எது விவேகம்? நித்திய அநித்தியங்களின் நிர்ணயம் தெரிவிவேகம்; மெய்ப்பொருள் பொய்ப்பொருள், நிலையான பொருள், நிலையில்லாப் பொருள் இன்னது என்று அறிவது விவேகம்.

பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களான் அன்றி உண்மையால் உணர்தல் விவேகம் – இதனைத் தத்துவ ஞானம் என்பர்.

தத்துவ ஞானம் பெற விழைவோருக்கு இந்நூல் மிகச் சிறந்த வழிகாட்டியாக உள்ளபடியால் உச்சிமேலணியும் சூடாமணியாகிய அணிகலனாகப் போற்றுவர். எனவே விவேக சூடாமணி எனும் பெயருடையதாயிற்று.

எனவே மெய்ஞ்ஞான நூலினைக் கேட்கும் அதிகாரிகளுக்குரிய தகுதிகள் நான்கனுள் முதலாவதாக விவேகம் வேண்டப்படுகின்றது.

நிலைப்பொருள் அயற்பொருள் தமைப் பிரித்துணர்தல்
அலைக்கழிக் கும்செயற் பலனிற் பற்றறுத்தல்
நிலைத்திடும் அமைதி மற்றைங் குணப் பிறப்பைத்
தொலைத் திங்கு விடுபடும் வேட்கை.

(விவேக சூடாமணி 19).

இவை 1. விவேகம், 2. வைராக்கியம், 3. சமாதி சட்க சம்பத்தி, 4. பிறப்பறுக்கும் வேட்கை என்றும் கூறப்படும். இவை மெய்ஞ்ஞானம் பெற சாதனங்களாம். சாதனமொன்றின்றிச் சாதிப்பாருலகிலில்லை. எனவே இந்நான்கு சாதனங்களையும் அடைந்தவர்க்கே மெய்யுணர்வு உண்டாகும் (வி.சூ. 18)

தத்துவம் அல்லது மெய்ப்பொருள் உணர்வுடையோருக்கே பிறப்பறுத்தல் கூடும். பிறப்

பிறப்பிறப்பில் சுழலுவர்.

(வி.சூ. 17)

அப்பர் பெருமானும்

தத்து வந்தலை கண்டறி வாரிலை
தத்து வந்தலைக் கண்டவர் கண்டிலர்
தத்து வந்தலை நின்றவர்க் கல்லது
தத்து வனவென் நண்புக லூரனே

(4.157) என்றருளினர்.

இச்சாதனங்களோடு நுண்ணுணர்வும், வேத சாத்திர மெய்மைகளை நிலைநாட்டி பொய்ம்மைகளை வெல்லும் வாதத்திறனில் மிக்கோனாய் உள்ளத்தில் தெளிந்த அமைதியுடையோனாய் உள்ளவனே ஆத்ம வித்தையை அறிதற்கு அதிகாரம் உடையோனாவன்.

(வி.சூ. 16)

இவற்றோடு குருவின் நெடுங் கருணையும் வேண்டும் (வி.சூ. 28)

சூரியனின் வெப்பத்தால் புவி வாடல் கண்டு இரங்கித் தன் தண்ணிழலில் குளிர்வித்து இன்பமூட்டுவது மதியின் இயற்கை. அவ்வாறே பிறவித் துயரினால் அழுந்தி வருந்தினரை எடுத்துப் பிறப்பிறப்பு வெம்மை நீக்கி உயர்வினில் வைத்தல் சத்குருவினரின் இயற்கை.

(வி.சூ. 38)

அன்னோர், தம் பாதார விந்தத்தைச் சேர்ந்தாரை விழைவுடனே ஏற்றுத் தந்தை எனக் கருணையினால் ஞான மழை பொழிவர். (வி.சூ. 42)

வெங் கோடைக்குக் குளிர்தரு நிழலெனக் கிடைத்த ஆசாரியனிடத்தில் மாணாக்கன் ஆத்மா ஏது? ஆத்ம பந்தம் ஏது? பந்தம் வந்தபோது இரண்டையும் பிரித்து அறியும்

வழி ஏது? என்று வினவ, ஆசாரியரின் அருள் மொழியால விடையாக எழுந்தது இந்நூல்.

மானுடப்பிறப்பில், நற்குலத்தில் தவஞ்செய் சார்பினில் வந்து தோன்றி பிறப்பறுக்கும் வேட்கை பெறுதல் மிக்க புண்ணியத் தாலாகும். (வி.சூ. 50)

பொருளாகிய கடன் பிள்ளையும் பிறரும் உதவிடப்போகும். வினைக் கடனை வாங்கியவர்களே தீர்க்க வேண்டும். தலைச்சுமை பிறர் வாங்கி போகும். தன் பசிக்குத் தானே உண்ணல் வேண்டும்.

யோகம், சாங்கிய நூற்புலமைகள், மண்ணை வீங்கிச் செய்யும் பூசனை, வேள்வி, முதலிய கருமங்களும் பயன்பட ா. சிவோகம் பாவனையால் பிரம்மமுடன் தன் ஆன்மா ஏகமென்றுணரும் சிந்தையினாலன்றி பிறப்பிறப்பு நீங்காது. (வி.சூ.55)

சூழும் பகையினை யொழித்து நாடு முழுவதையும் தன்னாணையில் கொண்டு வராதவன் தன்னைப் பேரரசன் எனக் கூறிக் கொள்வது நகையை விளைவிக்கும். அது போன்றதே நில்லாத உலகியல்பினை அறியாது பரம் பொருளைத் தெரிந்திடல் இன்றி "நிலைத்திடும் பிரம்மம் நான்" எனச் சொல்லிக் கொள்வதும். (59) இதனால் பயனில்லை.

எனவே, விடுதலை எய்தும் வழியின் முதற்படி நிலையிலாப் பொருள்களில் உள்ள விருப்பத்தை ஒழித்தல் (64). பற்றறுநிலை எனும் பக்குவம் எய்தியோரே மெய்த்துறவர் (72) பூதவுடல், பரமாத்மநிலை உணர்ந்திட புண்ணியத்தால் வரப்பெற்ற கருவி. இக்கருவியின் உண்மையை ஓர்ந்து அறிதல் வேண்டும். உடல், புலன்கள், பிராணன், அந்தக் கரணங்கள் யாவும் ஆத்மனுக்கு அயல்

(101) ஆத்மா சிவானுபூதி ஒன்றற்கே உரித்து.

இத்தகைய ஆத்மாவின் இயல்பை ஆசாரியர் விரித்து உணர்த்துகின்றார். (102 முதல் 113). சிவத்தோடு ஒருமை கொள்ளாமல், உடலுடன் ஒருமை கொள்ளும் உணர்வதுவே. இடர் அனைத்தும் வளர்வதற்கு மூலகாரணம். இந்த மடமையை ஒழிக்க உடல் அந்தக் கரணம் முதலிய சடங்குகளின் இயல்பு பற்றி அறிய வேண்டும். இம்மடமையை ஒழித்தால் பிறப்பிறப்புத் தொல்லையில்லை (138) இவற்றின் இயல்புகளை ஆசாரியார் தெளிவாக எடுத்தோதுகிறார்.

தன்னியல்பை அயலினின்றும் பிரித்து அறிந்த ஆன்மா பதியாகிய சிவத்தின் (பரமாத்மா) நிலையை அறிந்திடல் முறையாம் (176). அச்சிவத்தையறிந்து அதனோடு அறிபவர் அறிபொருள் அறிவு என்னும் திரிபுடி இன்றி ஒருமையுணர்வு கூடுதல் ஞானம். இவ்வாறு சிவோகம் பாவனை கூடியோர் சிவமாகவே திகழ்வர் (202).

சிவமாகிய பிரம்மத்தை அடைந்தவர் மீண்டும் பிறப்புறுவது இல்லை. ஆகையால் எவ்விதமேனும் சிவப்பிரம்மத்தோடு ஒன்றாகும் நிலையினை எய்தல் எவர்க்கும் நற்கடனாம் (190).

பல்நெறியூடும் அவிரோதம் காணும் விழைவு உடையோர், ஒற்றுமைக்கோர் வழி கூறுவர். அதுதான் தற்போதமின்மை.

எம்மதத் தோரெவ் வகை நிலை சொல்லினும்
சம்மத மேயெமக் குந்தீபற
தற்போத மாய்க்கு மேலுந்தீபற

அவிரோத உந்தியார் (6-6)

தற்போதம் நான் எனது வடிவினதாக இருக்கும் நான் என்ற உணர்வை ஒழித்தால் எனதும் தானே அழியும். நான் என்ற உணர்வை அழித்தால் நான் என்பது தானே அழியும். நான் என்ற உணர்வை மாய்த்து தனக்கு அயல் இல்லாத தன் இயல்பு உணர்த்துவது சங்கரமதம், வேதமதம்.

எனது என்பதொன்றில்லை. எல்லாம் சிவத்தினது உடைமையே அடிமையே என்பது சிவாகமம். தற்போதமாகிய யான் எனது என்பது மாய்ந்தோருக்கு மாயாப் பிரபஞ்சமெல்லாம் சிவத்திற்றோன்றி ஒருங்குபடுதலின் அம்மாயை யாவும் சிவத்திற்கு அன்னியமாகாது. இது வேதாந்த சித்தாந்த சமரசம் காண்போர் நிலை.

தத்துவ ஞானம் இன்றைய சமுதாயத்திடம் மங்கி வருகிறது. அதனால் கடவுள் மறுப்புக் கொள்கைகளும், சிறு தெய்வ வழிபாடுகளும் வேற்றுமதப் புகழ்ச்சியும் ஈர்ப்பும் நம் பாரத சமுதாயத்தைப் பீடித்து வருகின்றன.

இந்நிலையில் எளிய நடையில் மக்களிடையே பயிலப் பெறும் மொழி நடையில் தத்துவ நூல்களை படைத்துத் தருவோர் வேத நெறிக்குத் தொண்டு புரிந்தோராவார்.

மரபுச் செய்யுள் நடையில் மூலநூல் பொருளின் சிதைவின்றி இந்த அருமையான நூலைப் படைத்துக் கொடுத்த ஸ்ரீதர பாரதியின் தமிழ்த் தொண்டும் வேதாந்த தொண்டும் போற்றிப் பாராட்டுதற்குரியதாம். சங்கர பாரதி வடமொழியிற் செப்பிய மெய் மொழியைத் தெய்வத் தமிழில் தீட்டித் தந்த ஸ்ரீதர பாரதி வாழ்க! இந்நூலினை தமிழ் கூறு நல்லுலகம் பயன் கொள்ளுமாக!!

**சித்தர் சுவாமிகள்**
ஸ்ரீ சித்தர் ஞானபீடம்.

# மதிப்புரை



**டாக்டர் நா. மகாலிங்கம்**
தலைவர்,
சக்தி சர்க்கரை ஆலை மற்றும்
சக்தி நிறுவனங்கள்,
கோவை.

திருவோங்கு நலம் மிகுந்த திருவாளர் ஸ்ரீதரன் அவர்கள், ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிய விவேக சூடாமணி என்ற அரிய நூலைத் தமிழாக்கம் செய்து தந்ததும் இனிய எளிய கவிதைகளால் வடிவமைத்து அதனை வழங்கியிருப்பதும் பாராட்டுதற்குரியவை.

கேவலாத்வைதம் என்று மெய்ப்பொருள் உணர்வு வித்தகர்களால் பாராட்டப் பெறும் அத்வைத வேதாந்தத் தத்துவத்தை விளக்கம் செய்யவும் தத்துவ நிர்ணயம் செய்து சமுதாயத்தில் அக்கொள்கையை நிலைநிறுத்தவும் ஸ்ரீ ஆதிசங்கரரால் அருளிச் செய்யப்பெற்ற நூல் விவேக சூடாமணி.

ஸ்ரீ ஆதிசங்கரரின் அருளிப்பாடுகள் மூன்று வகைகளாக அமையும்.
1. உபநிடதம், பிரம்ம சூத்திரம் போன்றவைகளுக்கு அமைத்த விரிவுரை நூல்கள் (பாஷ்ய கிரந்தங்கள்), 2. தோத்திர நூல்கள், 3. மெய்ப்பொருள் கொள்கைகளை தத்துவக் கொள்கைகளை விளக்கவும் உறுதி செய்யவும் வேண்டி அமைத்த நூல்கள் (தத்துவ பிரகரண கிரந்தங்கள்) இம்மூவகைப் பிரிவுகளில் அமைந்த பல்வேறு நூல்களிலும் ஸ்ரீ ஆதிசங்கரரின் அளவையியல் ஆய்வு நெறியும் தத்துவ அனுபவ விளக்கங்களும், பொருள்

நிர்ணய விளக்கங்களும் உலகம் போற்றும் பெரும் புகழமைந்தவை. அவை எல்லாவற்றுக்கும் தலைமை வாய்ந்ததும், ஸ்ரீ ஆதிசங்கரரால் முதன் முதலாக அருளப் பெற்றதும் ஆகிய பெருமையுடையது விவேக சூடாமணி என்பது மரபு வழியில் அமைந்தவர் கொள்ளும் முடிவு.

ஸ்ரீ ஆதிசங்கரரின் விவேக சூடாமணி என்ற நூல் ஆத்மன் அனாத்மன் என்ற இரண்டையும் பற்றிய ஞானத்தைத் தெளிவாக எடுத்துக் காட்டும் அரிய நூலாகியமையால் இதற்கு விவேக சூடாமணி என்ற பெயரமைந்தது என்று கூறுவர் தத்துவ வாதிகள்.

விவேக சூடாமணிக்கு சிருங்கேரி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகர பாரதி சுவாமிகள் மிகவும் அருமையான தெளிவாக போற்றப்பெறும் பெருமையுடையதான விரிவுரை (பாஷ்யம்) ஒன்றை எழுதியுள்ளார்கள். சிருங்கேரி பீடாதிபதியின் இந்த பாஷ்யத்தின் மூலம் படிக்கும்போது 'விவேக சூடாமணி' மேலும் மேலும் தெளிவாலும் தத்துவ நியதியாலும் உயர்ந்து நிற்பதை அறியலாம்.

விவேக சூடாமணி 580 சமஸ்கிருத சுலோகங்களால் அமைக்கப்பெற்ற அரிய உரையாடல் நூல். கேவலாத்வைதம் எனப்பெறும் அத்வைத வேதாந்தக் கொள்கையின் மையக் கொள்கையாகிய ஆத்ம தத்துவத்தை இது என உறுதி செய்யவும் அதற்குரிய வழிகளை உணர்த்தவும் குருவானவர் சீடனுக்கு எடுத்து சொல்லும் உரையாடல் முறையில் அமைக்கப் பெற்ற நூல் விவேக சூடாமணி.

580 சுலோகங்களில் அமைந்த விவேக சூடாமணியை அரிய செந்தமிழ்ப் பாக்கள் 506 கொண்டு தெளிய உணர்த்தியிருக்கும் திருமிகு ஸ்ரீதரன் அவர்கள்

பாராட்டுக்குரியவர். தமிழ்ச் சமுதாயத்துக்கு, தமிழ் மட்டுமே அறிந்த மெய்பொருளுணர்வினருக்கும் இத்தகைய அரிய மொழி பெயர்ப்பும் கவிதையாக்கமும் கொண்ட நூலை அளித்ததன் மூலம் மொழி பெயர்ப்புத்துறை, கவிதைத்துறை, தமிழ்த்துறை, தத்துவத்துறை ஆகிய நான்கு துறைகளையும் இணைத்து நிறுத்தும் அரிய தொண்டினைச் சிறப்பாக அமைத்துள்ளார் எனக் கொள்ளலாம். அவர் தம் தொண்டு காலங்கருதிய கருத்தாழமிக்க தொண்டு.

ஈர்ப்புக் கவிதை ஆக்கும் வியப்புறு சக்தி இவருக்கு இயல்பாக அமைந்துள்ளது. அதனால் இவர் கவிதை இடைவிடாமல் தொடர்ந்து படிக்கும் எழுச்சியை உண்டாக்கி முடிவுவரையிற் கொண்டுபோய் நிறுத்தி விடுகிறது. தத்துவ நூலாகிய விவேக சூடாமணியைச் சுவைபட யாப்பியல் அமைப்பில் ஆக்கியிருப்பது பாராட்டப்படக்கூடிய யாப்பியல் திறமை.

சங்கர பாரதி, வெற்றி முழக்கிச்
சாற்றிய மொழியைச் செந்தமிழ்ப் படுத்திப்
பங்கம் இல்லாமல் படைத்தனன் நானும்
பேரருளாம் அவன் பதமலர் தொழுதே
எங்கும் வாழ் பரம்பொருள் இயக்கியதாலே
ஸ்ரீதர பாரதி செய்த இப்பணியில்
தங்கிய குறைகள் தவறுகள் எனது
தகைமைகள் இருந்தால் அவன் திருவருளே

என்ற முடிநிலைப் பாடல் விவேக சூடாமணியின் தமிழாக்கக் கவிதை நூலை இயற்றிய ஸ்ரீதர பாரதியின் மெய்ப்பொருளனுபவத்தை எடுத்துக்காட்டும் கண்ணாடியாகும்.

வாழ்க ஸ்ரீதர பாரதியின் தொண்டு.

ஓம்

ஜெய்குரு தேவ்

# முன்னுரை

மாதா, பிதா, குரு, தெய்வம் : அனைவரது திருவடிகளுக்கும் என் வணக்கங்கள்.

**ஆதிசங்கரர் :** அந்த இளம் துறவியின் சாதனைகள் தான் எத்தனை? எத்தனை? துவண்டு கிடந்த சனாதன தர்மத்திற்குப் புத்துயிரளித்து, வேதாந்தக் கருத்துக்களின் உயர்வை மீண்டும் உலகம் உணரச் செய்தவர் அவர். அத்வைத ஞானத்தின் அற்புதங்கள் அனைத்தையும் ஒன்றாக வடித்தெடுத்து அவர் படைத்த அரிய நூல்தான் விவேக சூடாமணி.

ஆன்மீகமும் அத்வைதமும் துறவிகளுக்கு மட்டும் சொந்தமல்ல. உலகியல் வாழ்க்கைக்கும் அவை மிக மிக அவசியம். எனவே இந்நூல் அனைவரும் படித்துணர வேண்டியதாகும். இவ்வரிய நூலைத் தமிழாக்கம் செய்ய நான் ஒரு கருவியாக அமைந்தது இறையருளால் மட்டுமே. கிட்டத்தட்ட பதினெட்டு ஆண்டுகளுக்குப் பின் இப்படைப்பு புத்தக வடிவில் வெளிவருவதும் இறையருளாலேயே.

என்னுள் ஆன்மீக நாட்டம் ஏற்படவும். அது இப்படைப்பாக மலரவும் காரணம், என் ஆன்மீகப் பெற்றோராய் நான் கருதும் புதுவை திரு. சதாசிவம் திருமதி. பாலா இருவருமே. என் ஆன்மீக நாட்டம் வளர்ந்து கொண்டிருந்த நேரத்தில் திருமதி. பாலா அவர்கள் தூண்டுதலால் விவேக சூடாமணி நூலை நான் படிக்க நேரிட்டது. சங்கரரின் கருத்தாழமும், உடன் சுவாமி

சின்மயானந்தரின் அரிய விளக்கங்களும், நான் அதுவரை அறியாத புதையலை எனக்குக் காட்டின. முன்பின் உணராத ஓர் ஆனந்தக் கடலில் நான் மூழ்கினேன்.

இந்நூலை இரண்டாம் முறை படிக்கத் துவங்கியபோது என்னை அறியாமலே முதல் பாடலின் தமிழ் வரிகள் என்னுள் தோன்றின. ஒரு கவிஞனாய் இருந்த போதும், வடமொழி அறிவும், ஆன்மீக ஞானமும் பெறாத நான், அதுவரை விவேக சூடாமணியைத் தமிழாக்கம் செய்ய எண்ணியதில்லை. ‘உலகெலாம்’ எனச் சேக்கிழாருக்கு இறைவன் அடியெடுத்துக் கொடுத்தது போல், முதல்பாடல் உள்ளே தோன்றிய போதுதான், இந்நூலைத் தமிழ்ப்படுத்த இறையருள் என்னைக் கருவியாக்கியதை உணர்ந்தேன்.

வடமொழி அறியாத நிலையில், சுவாமி சின்மயானந்தரின் ஆங்கில விளக்கவுரையும், இராமகிருஷ்ண மடத்தின் சொல் விளக்கங்களுடன் கூடிய ஆங்கில உரையும் எனக்கு மிகவும் துணை புரிந்தன. அவற்றின் உதவியால் மூலக்கருத்துக்களை உணர்வதும், அவை தமிழ் வடிவம் பெறுவதும் தொடர்ந்தன.

அந்நேரத்தில் நான் பெற்ற அனுபவங்கள் வார்த்தையால் விவரிக்க முடியாதவை. பல நேரங்களில் காட்டு வெள்ளமாய்ப் பாடல்கள் பெருகி வந்தது; பொருத்தமான சொற்கள் இயல்பாய் அமைந்தது. உள்ளிருந்து இயக்கும் சக்தியை நான் முழுமையாக உணர வைத்தன.

இந்நூல் முற்றுப் பெற்ற நேரத்தில் என் சத்குரு திருச்சூர் நாராயணாஸ்ரம தபோவனம் ஸ்ரீ பூமானந்த தீர்த்தரின் தொடர்பு கிட்டியதும், அடுத்தடுத்துச் சில

நாட்களில் சுவாமி சின்மயானந்தர், சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடம் சங்கராசாரிய சுவாமிகள் மற்றும் காஞ்சி மாமுனிவர் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆகியோரது தரிசனமும், ஆசிகளும் கிடைத்ததும் மறக்க முடியாதவை.

**1981**ல் எழுதப் பட்ட நூல் **1999**ல் புத்தக வடிவம் பெறுவதும் இறையருளின் லீலை என்றே கருதுகிறேன். உறங்கிக் கிடந்த படைப்பை வெளியிடுமாறும், அதற்குத் திருப்பதி தேவஸ்தானத்தின் நிதியுதவி பெறும் வழி காட்டியும் என்னைத் தொடர்ந்து ஊக்கப்படுத்திய எழுத்தாளர், நண்பர். திரு. டி.பி. இராமானுஜம் அவர்களே, இந்நூல் வெளிவர முதற்காரணம் என்றால் மிகையாகாது. அவருக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நிதியுதவிக்கு ஏற்றதாகக் கருதி என்னை ஆதரித்த திருப்பதி தேவஸ்தான அதிகாரிகளுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூலுக்கு அழகிய முகப்பட்டை அமைத்துத் தந்த சென்னை Vengtech Multimedia நிறுவன உரிமையாளர் நண்பர் திரு. J. **பாலமுருகன்,** புத்தகத்தைக் கம்ப்யூட்டரில் வடிவமைத்துத் தந்த திருச்சி ராஜ் கிராஃபிக் நிறுவனர் திரு. A. **அசோக்குமார்,** அழகிய முறையில் அச்சிட்டு வெளியிட்ட திருச்சி கீதா பிரஸ் உரிமையாளர், திரு. V.S. **மணி அய்யர்** மற்றும் அவரது குடும்பத்தினர் ஆகியோருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் எழுதப்பட்ட காலத்தில் இதனை மூல நூலுடன் ஒப்பிட்டு நோக்கிப் பாராட்டுரை வழங்கிய பன்மொழி அறிஞரும், சென்னை விவேகானந்தா கல்லூரி

முன்னாள் வட மொழிப் பேராசிரியருமான காலஞ்சென்ற பெரியவர் பாஷ்ய பாவக்ஞ வரகூர் **கல்யாண சுந்தர சாஸ்திரிகள்** அவர்களை இந்நேரத்தில் நினைத்து வணங்கி ஆசி கோருகிறேன்.

தற்பொழுது என் வேண்டுகோளுக்கிணங்கி நூலுக்கு மதிப்புரை வழங்கியுள்ள பெரியவர் டாக்டர் **நா மகாலிங்கம்** அவர்களுக்கு என் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலையும், என்னையும் தன் அருள்பொங்கும் வாழ்த்துரையால் பெருமைப்படுத்திய கோவைப் புதூர், கோவை ஸ்ரீ சித்தர் ஞானபீடம் தன்னில் அமர்ந்து ஆன்மீக நெறி பரப்பும் **ஸ்ரீ சித்தர் பெருமான்** திருவடிகளைப் பணிந்து வணங்குகின்றேன்.

இந்நூலையும் என் வேறுசில படைப்புக்களையும் வாழ்த்தி என்னை ஆன்மீகப் படைப்பாளியாக்கிய **ஸ்ரீ சிருங்கேரி** மற்றும் **ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகள், ஸ்ரீ சுவாமி சின்மயானந்தர்** ஆகியோர் அருட்பாதங்களில் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

தன் அருளாலும், அன்பாலும் என்னை அரவணைத்து, உள்ளொளியாய் நின்று வழிகாட்டும் என் **சத்குரு ஸ்ரீசுவாமி பூமானந்த தீர்த்தர்** திருவடிகளில் இப்படைப்பினைச் சமர்ப்பிக்கிறேன்.

என் வாழ்க்கைப் பயணம் முழுவதும் என் முயற்சிகளில் ஊக்கமும், ஒத்துழைப்பும் நல்கும் என் குடும்பத்தினர் அனைவரையும் இந்நேரம் கண்ணீர் மல்க நினைத்து மகிழ்கிறேன்.

இறுதியாக என் நற்குணங்களுக்கெல்லாம் காரணமாகி என்னை நல்வழி நடத்திய என் பெற்றோர் **விஸ்வநாதன், லலிதா** மற்றும் ஆன்மீக நெறியினை எனக்குக் காட்டிய என் ஆன்மீகப் பெற்றோர் **சதாசிவம், பாலா** ஆகியோருக்கு இந்நூலைச் சமர்ப்பணம் செய்து மகிழ்கிறேன்.

சென்னை — அன்புடன்

6 - 8 - 99 — **கோ. வி. ஸ்ரீதரன்.**

## சமர்ப்பணம்

என் சத்குரு ஸ்ரீ பூமானந்த தீர்த்தர்

என் பெற்றோர்

விஸ்வநாதன் – லலிதா

என் ஆன்மீகப் பெற்றோர்

சதாசிவம் - பாலா

இவர்கள் பாதங்களில்

ஓம்

## ஸ்ரீ ஆதி சங்கரர் அருளிய

# விவேக சூடாமணி

1. **ம**றைப் பொருள் விளக்கத்தில் மறைந்துள்ள
கருப்பொருள்
புலன்களுக்கு எட்டாப் பொலிவுகொள்
பரம்பொருள்;
நிறைவுகொள் ஞானத்தில் நிலைத்திடும் மூர்த்தி;
நித்தியானந்த சத்குரு போற்றி;
இறையவன் கோவிந்தன் இணையடி போற்றி;
எனைவழி காட்டிய குருபதம் போற்றி;
உறையும் என் இதயத்துள் ஒளிர்பவன் போற்றி;
உலகத்தின் குரு, உயர் கோவிந்தன் போற்றி;

2. **அ**ரியது மானுடம் அதனினும் அரிதாம்
அகத்தினில் ஆண்மையும், அந்தணத்
தன்மையும்;
விரிமறைப் பொருள்வழி நடத்தலும், வாழ்நெறி
விளக்கிடும் நூல்களில் புலமையும், பொய்மெய்
பிரித்துணர் சிந்தையும், பரம் பொருள் ஞானமும்
பரத்துடன் ஒன்றாம் பக்குவம் சேர்தலும்
வரிசையில் வருவன; வீடு எனல் சிறந்த பல்
ஆயிரம் பிறப்பில் சேர்பலன் விளைவாம்.

3. **பி**றந்திடும் பல்வகைப் பிறப்பிலும், மானுடப்
பிறப்பிது வாய்த்தல் பெருந்தவப் பயனே;
சிறப்புற வீட்டினில் சிந்தையைச் செலுத்திடும்
சீரிய குணத்தினில் சேர்பவர் சிலரே;
அறத்தினில் நிலைத்திடும் அருள்பொழி ஞானியர்
அவர்பதம் சேர்பவர் அவரினும் சிலரே;
இறையருளால் இங்கு இவை ஒரு மூன்றும்,
எய்தியும் இருளினில் மூழ்குவர் பலரே.

4. அரிய மானுடப் பிறப்பும், நல் ஆண்மை
நிறைந்த நெஞ்சமும், நல்வழி கூறிடும்
விரிந்த நூற்பொருள் விளங்கிடும் அறிவும்,
வாய்த்தும் மூடராய் வாழ்வரோ மாந்தர்?
சரிந்து சேற்றிலே வீழ்வரோ நாளும்?
சுயம் உணர் சிந்தை சற்றும் இல்லாதே!
தெரிந்து கானல்நீர் தேடுகின்றாரே!
தன்னையே தான்கொல்லும் தன்மை கொண்டாரே!

5. இன்னரும் பூமியில் இனிய மானுடம்,
இயங்கிடும் சிந்தையில் ஏறுகொள் ஆண்மை,
என்னநல் ஏற்றங்கள் இயல்பினில் வாய்த்தும்,
இங்கொரு ஜடமாய் இயல்புறல் தகுமோ?
தன்நிலை தன்னையே தான் உணர்ந்து, ஆங்கே
தன்னிலே நிலைத்திடும் தன்மை இல்லாதே,
மின்மினிப் பூச்சியாய் மறைந்து தோன்றிடும்
மாந்தரை விஞ்சிடும் மூடர் இங்கு உளரோ?

6. தத்துவ நூற்பொருள் தனை அறு புலமையும்
தெய்வத்தின் அருள்பெறச் செயும் பல பலிகளும்,
நித்தியப் பூஜையும், சடங்கு பல் வகைகளும்
நாமம் ஆயிரம் சொல்லி நாதனை வழுத்தலும்,
சத்தியமாய்ப் பலகோடிப் பல்கோடிப்
பல்கோடிப் பிறப்பிலும் பலன் எதும் தாரா;
முத்தியை எய்திட, முழுமைஓர் ஆத்மா,
மூலம் உணர்ந்து அதில் மூழ்கிட வேண்டும்.

7. "அமர நிலை தனை அடைந்திடும் மார்க்கத்தினை
ஆயிரம் செல்வமும் அளிக்க ஒண்ணாதே"
தமது கருத்து இது தத்துவம் யாவிலும்:
தடைசெயும் பிறப்புத் தளையினை நீங்கிச்
சமநிலை எனும் அச் சாந்தியை எய்துதல்,
சிந்தையை நற்பல செயல்களிற் செலுத்தினும்
அமைய ஒண்ணாதே; அமைய ஒண்ணாதே;
ஆயிரம் சடங்கிலும் அமைதி வாராதே.

8. **இ**க் கருத்தின் உண்மையினை ஏற்றுணர்ந்த மாந்தர்
அவர்,
மிக்க வரும் புலன் நுகர்வின் விழைவுதனை
வேரறுத்து,
தக்கமுறைத் தாள்பணிந்து, தன்னை உணர் ஆசானின்
மிக்கபெரும் கருணைமொழி மெய் உணர்தல்.
திருப்பணியாம்

9. **யோ**கநிலை பெற்று உலகைச் சமநிலையில்
உணர்ந்தவராய்,
பாகு படுத்தியே உண்மைப் பக்குவத்தில்
நிலைப்பதுவே,
வேகமிகு பிறப்பு இறப்புச் சாக்கடலில் வீழ்ந்து
அழியும்,
சோகநிலை நீங்கு தற்குச் சொல்லும் ஒரு வழி
முறையாம்.

10. **சி**றைப்படுத்தும் ஆசைகளின் சுழற்சியிலே,
அலைக்கழிக்கப்
பிறக்கும் அனைத்து இயக்கமுமே புறத்து ஒதுக்கித்
தன்னை உணர்
முறைமையிலே சிந்தனையை முழுமையுறச் செலுத்தி
இந்தப்
பிறப்பு இறப்புத் தளைவிடுத்தல் பேரறிஞர் செயும்
செயலாம்.

11. **த**ன்னலத்தைக் கடந்த செயல், தானம் எனும்
அவையாவும்,
புன்மை நிறை மனத்து உணர்மைப் புனிதமுறச்
செயக்கூடும்:
தன்னை உணர் பகுத்தறிவைத் தான் அடைதல்
இல்லையெனில்
அன்னவையால் மெய்ந்நிலையை அறிந்திடுதல்
இயலுவதோ?

12. **தொ**டும் மயக்கம் தனிற் பிறந்து, துயர்ப்படுத்தும்
நச்சரவின்
இடும்பையினை நீங்கிடுதல் எவ்விதமோ?
அமைதியுடன்,
ஒடுங்கிய நற் சிந்தையினால் உறுதி கொள்ள நோக்கி,
அங்கே
நடுங்குவதோர் கயிறென்னும் நிஜம் தன்னை
உணராமல்.

13. **ஞா**னியர்கள் தாம் உணர்ந்து, நமக்கருளிச்
சொன்னவழி
தானடைந்து நெஞ்சை அதில் தயக்கமறச்
செலுத்துவதால்
ஞானம் வரும்; மற்று, வெறும் மூச்சடக்கும்
பொருந்தவமும்
தானமும், நல் நீராடும், தத்துவத்தைக் காட்டிடுமோ?

14. **மு**த்தியை விழைபவர் முயற்சியும், இயல்பும்
முன்செலும் பாதையை முழுதும் நிர்ணயிக்கும்;
இத்திறம் இல்லையேல், இடமும், காலமும்,
இயைந்து வந்தாலும் இலை ஒரு பயனே.

15. **த**ன்னிலே நிலைத்துத் தயைபொழி குருவின்
தாள் பணிந்து, அவர் மொழிப் பொருள் நலம்
அறிந்து
தன்னையே ஆய்ந்து தியானத்தில் ஆழ்தல்,
முயற்சி கொண்டோரின் முழு முதற் கடனாம்.

16. **மி**கும்பல சாத்திர மெய்மையை நாடி,
போதிடும் பொய்மையை யாதில் வெல்வோராய்,
அகத்தில் நல் அறிவின் அமைதி கொண்டோரே,
ஆத்ம வித்தையை அறிந்திடக் கூடும்.

17. **ப**குத்துணர் அறிவும், பற்றறு மனமும்,
அமைதியும், தளையை அறுக்கும் அவாவும்,
தகுதி, எனப் பெற்ற தன்மை கொண்டோரே,
தனிப் பரம் பொருளினை அறிந்திடக் கூடும்.

18. "தத்துவப் பிரம்மம் தனை உணர் ஞானம்,
இத்தரம் நான்கின் இயல்பினில் இயலும்"
உத்தம ஞானியர் உரைத்தது இவ் வார்த்தை;
எத்தனை முயற்சியும் இவை இன்றி வீணே.

19. நிலைப் பொருள், அயற் பொருள் தமைப் பிரித்து
உணர்தல்.
அலைக்கழிக்கும் செயற் பலனிற் பற்றறுத்தல்
நிலைத்திடும் அமைதி, மற்று ஐங்குணம், பிறப்பைத்
தொலைத்திங்கு விடுபடும் வேட்கை அந்நான்காம்.

20. மெய்ப்பொருள் என்பது பிரம்மம் அஃதொன்றே,
பொய் இங்கு புலன் நுகர் உலகங்கள் யாவும் ,
செய்ய இக் கருத்தினைச் சிந்தையில் நிறுத்தல்,
பொய், மெய்ப் பகுத்தறிவு எனச் சொலப் படுமே.

21. புலன்களின் வழியாய்ப் பெறும் சிறு மகிழ்வும்,
பலவகைப் பிறப்பின் அனுபவம் யாவும்,
நிலை அல்ல எனவே நினைவினில் உணர்ந்து,
அலைவதை ஒறுத்தல், அது பற்று அறுத்தல்.

22. துயரம் என்று உணர்ந்தே, புலன்நுகர் விழைவை,
அயலினில் ஒதுக்கி, அயற்சி இல்லாமல்,
உயர்ந்த நன்னோக்கின் உறுதியில் மனம் நிலைத்து,
இயங்கிடும் நிலை மன அமைதி என்று இயம்புவர்

23. புலன்நுகர் பொருள்களைப் புறத்தினில் ஒதுக்கி,
நிலையினில் நிறுத்துதல், அது புலன் அடக்கம்;
அலைக்கழிக்கும் புற உலகத்தினால், மனம்
சலனம் உறா நிலை தன்னுள் ஒடுங்குதல்.

24. இழிமையும், துயரும், எதிர்வரும் போதிலும்,
பழி கொளும் பான்மையும், புகலிடம் தேடலும்,
அழுது, புலம்பி, அரற்றலும் இன்றித் தன்
வழியினிற் செலல், அது பெரும் பொறை
எனப்படும்

25. **த**க்க நூல்களும், குரு சொலும் மொழிகளும்
மிக்க ஆய்ந்து, நற்கருப் பொருள் உணர்தல்,
அக்கறை எனப்படும்; அக்குணம் தனை, மிகக்
கைக் கொளும் நெஞ்சே மெய்ப் பொருள் காணும்.

26. **த**டை செயும் எண்ணத் தள்ளாட்டம் அறக்
கடந்த மெய்ப் பொருளைக் கருத்தினில் நாடி,
அடங்கும் மனம், பெரும் அமைதியில் ஆழந்து
ஒடுங்கும் நிலை, ஆழ் சமநிலை எனப்படும்.

27. **த**னைக் கட்டிவிடும் தான் எனும் குணம், உடல்
அனைத்துப் பிணைப்பும், அறியாமை என,
மனத்துள் மெய் உணர்ந்து, மாயையை விடுத்திடும்
முனைப்பினில் தவித்தல், முக்தி விழைதல்.

28. **வி**டுபடும் வேட்கை வேகம் அற்று இருக்கும்,
மடநெஞ்சமும், மெய் உணர்ந்திடக் கூடும்,
கடும் பற்றறுத்தலும், அமைதியும், குருவின்
நெடுங் கருணையும், அங்கு நிலைத்திடும் போதே.

29. **கு**மைந்து, கருகி, விடுபடும் வேட்கையில்,
சுமை எனப் பற்றினைச் சுட்டு எரிப்போர்க்கே,
அமைதி, மற்று ஒங்கும் அரிய குணங்கள்,
சமைந்து, நிலையாய்ச் சுடர்தரக் கூடும்.

30. **வி**ழைவை விடுத்தலும், வேட்கையும், குன்றி,
இழிந்த நெஞ்சினில் அமைதியும் பிறவும்,
விழியினில் தோன்றியும், வேட்கையைத் தீர்க்காது
ஒழிந்த கானலாய் உயிர் அற்றுப் போகும்.

31. **மு**க்தியை எய்திடும் முறைமைகள் யாவிலும்,
பக்தி ஒன்றே மிகப் பெருமை கொள் வழியாம்;
பக்தி எனல் மனம் ஒரு முகமாக்கித்
தக்க தன் இயல்பினைத் தேடிடும் நெறியாம்.

32. **த**ன் இயல் தடையற ஆய்தலே பக்தி;
முன் நவில் நலம் பெற்றுத் தன்நிலை ஆய்பவர்,
இன்னருள் ஞானத்தில் இயங்கிடும் ஆசான்,
முன்னிலை எய்துவர், தளை அறுமாறே.

33. **நூ**ற் பொருள் புலமையும், நசை அறு பான்மையும்,
போற்றிடு தூய்மையும், பரம்நிலை ஞானமும்,
ஊற்று எனப் பொங்கிடும் அருளும், நல் அமைதியும்,
ஆற்றார்க்கு அருந்துணை ஆவதும் இயல்பாய்,

34. **பெ**ற்ற நற்குருவின் பதங்களில் சேர்ந்து,
பற்றுடன், மிக்க பல் பணிவிடை செய்து,
உற்ற தன் நெறியால் உளம் மகிழ் பொழுதில்,
மற்றநல் விழைவினை முறையிடல் வேண்டும்.

35. **அ**ருள்பொழி குருவே சரணம்; தன்னை
அடிபணிந்தோர்க்கு அரும் துணையே சரணம்;
கருணையின் கடலே சரணம்; பிறவிக்
கடலினில் மூழ்கிக் கதறிடும் என்னை,
இருளினில் நீக்கி இதமாய் முத்திக்
கரையினில் சேர்த்துக் காத்திடு வீரே;
திருவிழிப் பிறக்கும் தேனருள் மழையை
ஒருதரம் பொழிந்து எனை உய்யவைப்பீரே!

36. **நெ**ருப்பெனக் கருக்கிடும் வாழ்க்கை என்னை
நித்தமும் வறுத்திடும் நிலையினில் துடித்தேன்;
சுருட்டிச் சுழற்றிக் கிழிக்கும் துயரச்
சூறையின் கொடுமையில் அகப்பட்டுத் தவித்தேன்
மருட்டிடும் உலகினை வெறுத்தேன் இறையே !
மரணத்தின் பிடியினின்று எனைக் காப்பீரே!
அருள் அடி சரணம் என்று அடைந்தேன் உமக்கு
அன்னியமாய் ஒரு புகல் அறியேனே.

37. **உ**ளத்தில் சாந்தமும், உயர்வும் பொங்கிட
உலவிடும் உத்தம ஞானியர் பலரும்,
இளவேனில் என இதமளித்து எவர்க்கும்
இனிமைகள் பொழிந்தே இருப்பர் இவ்வுலகில்;
அளவறு துயர்தரும் பிறவிக் கடலை
அவர்தாம் கடந்த பின் பலன் விழைவின்றி,
இளகிய சிந்தையில் இயங்கி நற்றோணியாய்ப்
பலர்க்கும் உதவுவர் பரிவுடன் நாளும்.

38. **வெ**யிலினில் வாட்டிடும் பரிதி செய்யும்
வேதனையால் புவி வாடல் கண்டு இரங்கி,
நயந்து தன் இயல் பாலே நிலவில்
நனைத்துக் குளிர்விக்கும் மதி அது போலே,
துயரினில் அழுந்தினர் தம்மைத் தேடித்
தாமே உதவித் துணை எனத் திகழல்,
இயற்கையில் வருநலம் ஆகும் ஞான
உயர்வினில் நிலைத்து இங்கு ஒளிர்பவர் தமக்கே.

39. **பு**ண்ணியம் செய்தவர், தங்கள் ஒருகணப்
பார்வை பட்டு அருளுக்குப் பாத்திரமானோர்;
தண்மையும், தூய்மையும் தாங்கி பிரம்மத்
தத்துவத் தேனினை நித்தமும் ஊறிப்
பண்பொடு பொழிந்திடும் வார்த்தை என்னும்
பெருமழை தனில் எனை நனைந்திடச் செய்வீர்
புண்படச் செய்திடும் காட்டுத் தீயெனப்
பொசுக்கிடும் வாழ்க்கையைப் பொறுத்தல் இங்கு
ஆற்றேன்.

40. கடத்தற்கு அரிதாம் பிறவிக் கடலைக்
கடந்து, கரை தனைச் சேர்வது எவ்விதம்?
இடம்எது வாழ்வின் இறுதியில் போவது?
எதிர்ப்படும் வழிபல, எவ்வழி செல்வது?
அடங்கிய பொருள் எதும் அறியேன் சுவாமி!
அருளுடன் ஏற்றெனை, இருளுடன் துயரம்
படர்ந்த இவ்வாழ்க்கையைக் கடந்து, அழிவில்லா
நிலைதனை அடையும் நெறியினைஉரைப்பீர்.

41. அனல் என்று சுடுகின்ற வாழ்க்கையிலே
தவித்தோன்,
தனைச் சேர்ந்து 'சரண்'என்று இத்தரம்
சொன்னபோது
நனி கொண்ட இரக்கத்தில், தயை பொங்கநோக்கி,
'நினைக் கொண்ட அச்சங்கள் நீங்கு',
என்பார் குருவே

42. சிந்தையிலே சாந்தமுடன், சாத்திரச் சொல் ஏற்றுப்
பந்தத்தை விடுகின்ற வேட்கையில், பாதார
விந்தத்தைச் சேர்ந்தாரை, விழைவுடனே ஏற்றுத்
தந்தை எனக் கருணையினால் ஞானமழை
பொழிவார்.

43. குருமொழி:

கற்றநல் மனிதா, கவலை உறாதே -
காலனை வெல்லுதல் கடுஞ்செயல் அன்று;
உற்ற இப் பிறவி, உவர்க்கடல் நீங்க,
ஒருவழி உளது, சத்தியம், சத்தியம்;
நற்றவ முனிவர் நமன்தனை வென்று,
நிலைப் பொருள் நாடி, நடந்த அப் பாதையைப்
பற்றி உனக்குப் பிழை அறச் சொல்வேன்;
பற்றி, நீ செல்லையேல் பயம் இல்லை உனக்கே.

44. **பி**த்துற வைத்திடும் உறவுகள், கூடிப்
 பிணைக்கும் இவ் வாழ்க்கைப் பயந்தனைப்
 போக்கும்,
உத்தமமான வழி ஒன்று உளது
 உறுதியுடன் அதில் ஒன்றியே, நீயும்
தொத்திடும் நோய் எனத் தொடர்ந்து துயர்தரும்,
 சம்சாரம் தனைச் சடுதியில் நீங்கி,
நித்தியானந்த நிலையினை எய்துவாய்;
 நேருறச் சொல்வேன், நிலைபெறக் கேட்பாய்.

45. **சி**ந்தையைச் சீராய் ஒருமுகப் படுத்திச்
 சொலும் வேதாந்தப் பொருள் உணர் பொழுதில்,
முந்திடும் அரிதாம் மிக உயர் ஞானம்
 முயன்று அதன் உட்பொருள் முனைபவர் தமக்கே;
அந்தநல் ஞானம் அடைந்த அக் கணமே,
 அழிவினில் தோன்றி அழிவினைக் கொடுக்கும்,
இந்தச் சம்சாரம் இடர் தரும் துயரம்,
 இருளெனக் கதிர்முன் இடம் அற்றுப் போகும்.

46. **ப**க்தியும், மிக்கநல் அக்கறையும், உயர்
 மெய்ப் பொருள் தேடும் ஞானமும், இங்கே
முக்தியை எய்திட முழுமுதல் வழி என
 முழங்கிடும், மறைப்பொருள் விளக்கும், எந்நூலும்;
இக்கருத்தினிலே இயங்கிடும் எவரும்,
 இருள் எனச் சூழும் மருள்செயும் வினைபோல்
சிக்கி, இடர்ப்படும் உடல் எனும் சிறையின்
 தளையினைப் பிளந்து இங்கு விடுபடுவரே.

47. **அ**றியாமையினால், அகநிலையாம் பரம்
 ஆத்மநிலை தனில் அமைதி கொள்ளாமல்,
சிறையாய்ச் சூழும் அயலினிற் சேர்ந்து,
 சஞ்சலம் எய்திச் சாகரம் ஆகிய

பிறப்பிறப்பில் நீ இடர்ப்படல் ஆனாய்;
பொய், மெய் பிரித்து உணர் பகுத்தறிவாலே,
செறு நெருப்பெனவே சுடர்விடும் ஞானம்
பெறின், அறியாமை வேருடன் கருகும்.

48. **சீ**டன் கேள்வி :

**த**யையுடன் கேட்பீர் ஐயா! - நெஞ்சம்
தளர்வுற நாளும் வாட்டிப்
புயல் எனப் பொங்கிச் சீறும் - எந்தன்
பலப்பல கேள்வி யாவும் ;
இயைந்து நல் தேனில் முக்கித் - தாங்கள்
இசைவுடன் விடை எனக்கு,
இயம்பிடும் வார்த்தை கேட்டே - எந்தன்
இதயமும் நிறைவு கொள்ளும்.

49. **பி**ணைப்பு அது என்பது என்ன? - எப்படிப்
பிறந்தது? தொடர்வது ஏனோ?
துணித்திடும் வகை எவ்வாறு? - இங்கே
தனக்கு அயல் என்ப யாவை?
இணையிலா ஆத்மா ஏது? - மற்று அவ்
இரண்டையும் பிரித்து நோக்கும்,
துணிவினைக் கோடல் எவ்வாறு? என்றே
தெளிவுற அருளிச் சொல்வீர்.

50. **கு**ருமொழி :

**இ**ருள் எனச் சூழ்ந்தே இறுக்கிடும் இந்த
அறியாமையினை அகற்றிப், பெரும் பரம்
பொருளினை நாடும் பான்மை கொண்டாய்; உன்
பிறவியின் பயனைப் பெற்றனை நீயே;
பெருமை கொள் குலமும், பெருமிதம் கொள்ளப்
பெரு விழைவு இதனைப் பெற்றனை நீயே;
அருளினைப் பெற்றாய் - ஆயிரம் கோடி,
அரும் பிறப்பின் நற் பெரும் பலனாலே.

51. **பொ**ருளினிற் சுமந்த பெரும் கடன், பெற்ற
புதல்வரும் பிறரும் உதவிடப் போகும்;
மருளினிற் சுமந்த மயக்கம் என்னும் கடன்,
மறைந்திடத் தனை அன்றி எவர் செய்யக் கூடும்?
சுருளுறத் தலைசுற்றிச் சோர்ந்திடச் செய்யும்,
தலைச்சுமை பிறர்வந்து தாங்கிடக் கூடும்,
இருளுறச் செயும் பசி இடும்பையின் வாட்டம்,
எவர் உண்ட போதிலும், தனக்கு எங்கு போகும்?

52. **மு**த்திய நோயின் வேகத்தில் வாடி,
முனகிடும் மனிதர்க்கு, முறைப்படி வகுத்த
பத்தியமும், அரு மருந்தும் கூடிப்
பக்குவமாய்த் தரப் பிணி அற்றுப் போகும்;
இத்தரம் நீங்கி, இயம்பிய முறைகளை,
இளகிய நெஞ்சுடன், அயல் எவர் கொண்டு,
எத்தனை நாள்தான் இயங்கிய போதிலும்,
இவரது வேதனை எப்படித் தீரும்?

53. **எ**ந்தவோர் பொருளின் இயல்பையும், பெரியோர்
எப்படிச் சிறப்பாய் எடுத்து உரைத்தாலும்,
சொந்தமாய் நுகர்ந்து, தான் உணராமல்,
சிந்தையில் விளங்குதல் அரிது அரிதாகும்;
'சந்திரன் எழில்' எனச் சாற்றிடும் பாடற்
சந்தங்கள் ஆயிரம் செவியுறக் கேட்டும்
அந்தகர் அறிவரோ அமுதொளி நிலவை?
அவ்வொளி இதயத்தில் தெளித்திடும் கிளர்ச்சியை?

54. **த**ன் அரு முயற்சியும், தளர்வு அறு மதியும்,
துணை எனத் தாங்கித் தனை அறியாது,
மன் அறியாமை, அவா, வினை, மற்று
மயக்கிடும் தளைகளின் பிணைப்பு அதனால் வரும்,
இன்னலை நீங்கி, இன் நிலை எய்துதல்,
எவர் பிறர் உதவியில் இயன்றிடக் கூடும்?
நூறு யுகம், பல மூண்டு அழிபோதிலும்,
முயற்சிகள் யாவும் வீண், வீண், வீணே.

55. **யோ**கம், சாங்கியம், ஏனைய நெறிகள்,
இயம்பிடும் மொழிகளில் விளங்கிடும் புலமை
ஆகம விதிப்படி, ஆயிரம் வினைகள்,
அளவறு கல்வி, எனும் பல சிறப்பும்
வாகுடன் பெறினும், வீடு உறல் அரிதாம்;
வாழ் நிலைப் பிரம்மம் உடன் தன் ஆத்மா,
ஏகம் என்று உணரும் சிந்தையினால் அன்றி,
எவ்வழியானும், அஃது எய்துதற்கு அரிதாம்.

56. **யா**ழ் அதன் எழிலும், மீட்டிடும் இசையும்,
அரங்கினர் புலன் பெறும் விருந்து எனத் திகழும்;
சூழ்நிலை மாறிச் சபை கலைந்திடவே,
சிறப்புக்கள் யாவும் உறங்கிடப் போகும்,
பொழ்நிலம் போற்றும் வாக்கு வன்மையும்,
புலமையும், திறமையும் புகழ்தரக் கூடும்;
ஊழ் எனச் சூழும் பாழ்வினைப் பிறப்பை,
உதறிட அவை என்ன உதவிடக் கூடும்?

57. **நி**லைத்த பேருண்மை நெஞ்சு உணராமல்
நூற்பொருள் அறிவால் பலன் எதும் இல்லை;
நிலைத்த பேருண்மை நெஞ்சு உணர்ந்தாலும்,
நூற்பொருள் அறிவால் பலன் எதும் இல்லை;
அலைக்கழிக்கும் வெறும் தத்துவ விளக்கம்;
அயர்வுறும் நெஞ்சினில் தருவது மயக்கம்;
நிலைப்பொருள் உணரத் தலைப்படும் மாந்தர்,
நெறிவழித் தன் இயல்பு அறிந்திடல் வேண்டும்.

58. **அ**றியாமை எனும் கருநாக விடம்,
அறிந்திடப் பரம்பொருள், முறிந்திடும் யார்க்கும்;
மறைகளும், சாத்திர, மணி மந்திரமும்,
மற்று அந்த நஞ்சினை எப்படிப் போக்கும்?
அறிந்து உணராமல் பிரம்மம் என்றே பல்
ஆயிரம் முறை சொல்லின் அருள்நிலை வருமோ?
நறு மூலிகையை நினைப்பதனால் மட்டும்,
நோய் அதன் வாதனை போய் ஒழிந்திடுமோ?

59. **உ**லைவுறச் செய்யும் பகை நிலை குலைந்து ஓட,
உறுகளத்தே நின்று, புறம் காணாமல்,
நிலவளம் யாவும் நெறிக் கொணராமல்,
'நான் அரசன்' எனில் நகை வரும், அதுபோல்
பல எனத் தோன்றும் உலகு ஒழித்து, அங்கே
பரம்பொருள் ஒன்று, எனத் தெளிந்திடல் இன்றி,
'நிலைத்திடும் பிரம்மம் நான்' எனச் சொல்லும்,
நவிற்சியில் பயன் என்ன? புவியினில் யார்க்கும்?

60. **ம**ண்ணிடை ஒளித்த மணிக்குவை வேண்டின்,
முயன்று அதை அகழ்ந்து, செயல் படல் இன்றி,
எண்ணுவதால் மட்டும் எப்படிச் சேரும்?
இருள் எனச் சூழும் மாயையை நீக்கி,
உண்மையை உணர்தல், உணர்ந்தவர் மொழியில்
சிந்தையைச் செலுத்தித் தியானத்தில் மூழ்க,
நண்ணிடும்;அதை விட்டு நவில் பல உரையால்
நிலைப் பொருள் விளக்கம், நிகழ்வு பெறாதே.

61. **இ**வ்விதமாய்ச் சொன்ன கருத்து, அவை யாவும்
உண்மை என்று உளத்தினில் உணர்வதனாலே,
வெவ்வினையால் வரும் பிறப்பு, இறப்பு என்னும்
விலங்கினை நீங்கிடும் விழைவுகொள் நல்லோர்,
எவ்வகை யானும் அவ்வகை முயல்வர்,
இமைப் பொழுதேனும் தளர்வு கொள்ளாதே -
கவ்விய நோயின் கடும் பிணி நீங்கக்
கடுமருந்து ஆயினும் கைக் கொள்ளும் திறம்போல்.

62. **அ**ருமை, இன்று, இங்கே, அமைதியுடன் நீ,
அமைத்த வினாக்கள் அற்புதம்; மிகவே
பெருமை கொள் நூற்பொருள் பகுத்து அறிந்தோரும்
பொருள் மிகுத்தாம் எனப் போற்றுவர் இறைஞ்சு;
சுருங்கிய சொற்களில் விரிபொருள் தேக்கிச்
சக்கையை நீக்கிச் சாற்றினை வடித்தனை,
இருமையைக் கடந்த பரம்தனை வேண்டும்,
எவரும் அறிந்திட ஏற்றனை இவையே.

63. **இ**ன்று, நான், இங்கே இயம்பிடப் போகும்
ஏற்றநற் கருத்தை இரு செவியாலே,
நன்று நீ கேட்டு, நினைவினில் தேக்கி,
நுண்பொருள் சிந்தையில் கண்டு அறிவாயேல்,
தொன்று தொட்டே உனைத் தொடர்ந்து
இடர்ப்படுத்தும்
தொல்லையாம் பிறவித் துயர் எனும் நோயை,
வென்று; நீ இன்பமாம் வீடு அடைந்திடுவாய்;
விருப்புடன் கேட்பாய் வித்தகன் நீயே.

64. **வி**டுதலை எய்திடும் வழியினில் முதற்படி,
அழியும் பொருள்வழி விழைவினை ஒழித்தல்;
அடுத்து நல் அமைதி, புலன் அடக்கம், பொறை,
தன்னலச் செயல் அறத் தள்ளுதல், இறையும்
நெடும் பொருள் கேட்டு, அதை நெஞ்சினில்
தெளிதலும்
நின்று, நிலைத்த, நீள் தொடர்த் தியானமும்
தொடர்ந்திடத் தன்நிலை துய்த்து உணர் முனிவர்,
தூய நிர்வாணச் சுகம் இங்கு அடைவர்.

65 **அ**யல் எது என்பதும், ஆத்மா என்பதும்,
அவைகளைத் தெளிவாய்ப் பிரித்து உணர்கின்ற,
நியமம் எது என்பதும், கேட்டனை; அவற்றை
நீ அறிந்திடுதல் நலம் எனக் கருதி,
நயம்பட விரிவாய் நான் உரைப்பேன்; இங்கு
நான் சொலும் வார்த்தைகள் நேருறக் கேட்டுச்
சுயம்படு சிந்தையில் சூழ்பொருள் ஆய்ந்து,
மெய்யினை உணர்வாய், மேன்மை
கொள்வோனே.

66. **சோ**றும், எலும்பும், கொழுப்பும், தசையும்,
குருதியும், நரம்பும், தோலும், இவ்வேழ்
கூறும் ஒருங்கே கூடிக் கை, கால்,
மார்பும், முதுகும், மண்டையும், தொடையும்,

தேறும் உடல் இது, தான், எனது, என்னும்,
அகந்தையின் இடமாய் அமைந்து நாள் தொறும்,
மாறும் இயல்பதாம்; மண், நீர், தீ, வான்,
காற்று எனும் நுண்பொருள், வடிவு இதன் மூலம்.

67. **மூ**லம் ஒன்றுடன், மற்றவை ஒன்றாய்
மூண்ட கலவியில் முகிழ்த்தது இவ்வுடல்எனும்,
தூலம்; அவற்றுள் திகழ்ந்திடும் சாரம்,
ஒலி ஒளி எனப்படும் புலன் நுகர் பொருளாய்க்
கோலம் ஐந்து உருக்கொண்டு, இங்கு உயிர்க்கு எலாம்
கூடும் மகிழ்ச்சியும், துயரமும் நல்கிக்
காலச் சுழற்சியாம், கற்பனை மெய் என்று
காட்டித் திரித்துக் கலக்கும் எந்நாளும்.

68. **சி**ந்தித்து அறியும் செயல் இலாமூடர்,
சிதைத்தற்கு அரியதாம் விழைவு எனும் கயிற்றால்
இந்தப் புலன்நுகர் பொருள்களின் இயல்போடு,
இறுகப் பிணைப்பட்டு உலகிதன் மீது,
முந்தும் பழவினை தந்த விளைவு அனைத்தும்,
வேகச் சுழலிலே மூழ்கித் துயர்ப்பட
வந்து, வருந்தி, வாழ்ந்து, பின்போவர் –
மேலாம், கீழாம் மூளும்பல் பிறப்பில்.

69. **மா**னுடன் யானையும், விட்டிலும், மீனும்,
தேனியும் ஒலி முதல் திகழ்ந்திடும் புலன் ஐந்து
ஆனவை தம்மிலே ஒன்றினுக்கு அடிமையாய்,
ஆசையால் அழிவதை அனுபவித்து அறிந்தும்,
தான்அவை ஐந்தையும், தாங்கொணா மோகத்தில்
தழுவுதல் சுகம் எனத் தள்ளாடும் இந்த
மானிடப் பிறப்பு இது தானுறும் நிலை என்ன?
மக்கி, மிதிபட்டு, மாள்வது அல்லாமல்?

70. தஞ்சம் என்றே மனம் தழுவிடத் துடிக்கும்,
இந்தப் புலன்களின் ஏக்கம், நாகத்தின்
நஞ்சினும் கொடியதாம்; நஞ்செனத் தாக்கி,
நலிவுறச் செய்திடும் நமை எந்நாளும்;
நஞ்சு அதைப் பருகிட நிகழ்ந்திடும் மரணம்;
நசையுறச் செய்திடும் புலன் உணர்வு எனும் மங்கை
மஞ்சமோ, நெஞ்சினில் நினைத்த அக் கணமே
மருட்டி, வெருட்டி, மயக்கி, நமைக் கொலும்.

71. ஒறுத்திடற்கு அரியதாய் உறுத்திடப் பிணைக்கும்,
உணர்புலன் வழிச்செலும் உள்ளலாம் கயிற்றை
அறுத்து, அதன் பிடியினை வெறுத்திடும் மனம் கொளும்
அவர்க்கே வீடுறல் அவசியம் கூடும்;
அறுவகைத் தத்துவச் சாத்திரம், அவை சொலும்
செறி பொருள் கசடறத் தெரிந்து தேர்ந்தாலும்,
அறுபடப் பற்றினை அகற்றிடுவோர்க்கு அன்றி,
அன்னியர் யார்க்கும் அந்நிலை வருமோ?

72. பற்றறு நிலை எனும் பக்குவம், நெஞ்சில்
பதிந்து நிலைபெறும் பண்பு அதைக் கொளாமல்,
நற்றவ வேடராய், நனிதுயர்ப் பிறவி,
நெடுங்கடல் கடந்திட நினைப்பவர் தமையே,
பற்றி இழுத்துப் பல்லால் நெறித்துப்
பாழ் அவா எனும் சுறா பாதியில் கொல்லும்;
மற்று அதை முற்றிய மெய்த் துறவால் வெல்லும்
மாண்பினர், தடை அற மறு கரை சேர்வர்.

73. பெருந்துயர் மறைந்தே இடர்ப்படுத்தும் இந்தப்
பொருள் வழி மகிழ்வு எனும் பாதையின் வழியாய்,
விரும்பியே சென்றிடும் அறிவிலார், விரைவாய்
வீழ் வராம் அழிவினில், அறிந்திடல் வேண்டும்;

அருளுடன் நலம் விழை குருமொழி யோடு,
அறிவினால் தெளிந்திடும் பெருவழி மேவும்,
அருங்குணம் பெறுபவர் அடைவராம் நோக்கை,
அறிந்து கொள் இதனைச் செறிந்த மெய் எனநீ.

74. இச்சிறை நீங்கியே இன்பம் அஃது எய்திடும்,
ஏக்கம் உன் நெஞ்சிலே எரிந்து கொண்டிருந்தால்,
இச்சை என்னும் இதை நச்செனக் கருதியே,
எய்திடாத் தொலைவினில் வைத்திட வேண்டும்;
நச்சியே நிறைவுடன், கருணையும், நேர்மையும்,
நலம்தரும் அமைதியும், அடக்கமும், மிகமிக
உச்சமாய் நெஞ்சிலே ஓங்கிட வளர்த்தே,
உறுதியாய் நெறியினில் நடந்திடு நாள் தொறும்.

75. பூத உடல் இது பரமாத்ம நிலை
பற்றி உணர்ந்திடப் பெற்றநற் கருவி;
ஆதி இலா அந்த அறியாமை எனும்
அடிமைத் தனம் விட்டு விடுபடும் செயலில்,
ஏது என இதை ஓய்தல் இல்லாமல்,
இயல்புறவே தினம் பயன்படுத்தாமல்,
ஊதிப் பருத்திட உணவிட்டு வளர்ப்போர்,
ஊண் எனப் பிற உயிர்க்கு உரிமைப்பட்டு
அழிவர்.

76. உடல் இதை வளர்த்து, அதன் உயர்வினில் ஆன்ம
உண்மையை உணர்ந்திட எண்ணிடும் மாந்தர்
கடலினைச் சுறாவினைப் படகு எனக் கருதிக்
கைக் கொளும் மூடர் போல் மிக்கவே நோவர்;
கூடும் மெய் சேர்ந்திட விழைந்திடும் எவர்க்கும்,
உடல் வழிச் சிந்தனை இடர்தரும் மரணம்;
படர்ந்திடும் பற்று இதை முற்றுமாய்க் கடந்த
பக்குவம் மிக்கவர், முக்தி கொள் தக்கவர்.

77. **தோ**லுடன் சதையும், குருதியும், நரம்பும்,
கொழுப்பும், எலும்பும் கூடி எந்நாளும்
மாலுறச் செய்யும் மல, மூத்திரக் குடம்
மேனி தன்னோடு, கூடிடும் உறவைக்
காலமும் பேணும் கருத்தினை ஒழிநீ;
தான் இதை வென்ற ஞானியர் எவரும்,
நீலமா மேனி நாரணன் தன்னுடன்
நிலைத்திடும் பரம நிலைதனை எய்துவர்.

78. **நி**றைந்த முன் வினையால், பூதங்கள் கூடிப்
பிறந்த இவ்வுடலில், இருந்து, நல் ஆத்மா
அறிந்து சூழ்நிலை அனுபவிக்கும்; அது
புறப்பொருள் அறிவது விழிப்பு எனும் நிலையில்;
சிறப்புறு ஜீவன் உடலுடன் சேர்ந்து,
சுவைமிகு பொருள்பல வகை மிக நுகரும்
திறத்தினைப் புறத்து அமை உறுப்புக்கள் பெறலால்,
உடல் இதன் இயக்கம் விழிப்பினில் சிறக்கும்.

79. **பி**றந்து, தளர்ந்து, இறந்திடும் தன்மையும்,
பருமை, இளமை எனும் பல நிலைகளும்,
புறத்து வாழ்க்கை நெறிகளும், ஒழுக்கமும்,
பிணிகள் கோடியும் சுமந்திடும் உடல் இது,
சிறப்பு, புகழ், இகழ், வெறுப்பு எனும் பல
செய்கையின் பயன் எய்திடும்; ஜீவன்,
நிறைந்த உலகினை நேருறப் பார்க்க,
நிகழ்ந்த வீடு இது; நீ உணர்வாயே.

80. **து**ய்த்துப் பொருள்களைத் தெரிந்து அறிந்திட வே,
துணை எனத் திகழ்ந்து, பயன்தரும் சிறப்பால்,
மெய், வாய், விழி, நாசியொடும், செவியாம்
ஐம்புலன் இவற்றை அறிவுறுப்பு என்பர்;
கை, கால், நாவுடன், குதம், குறி இவற்றைக்
காரிய உறுப்பு எனக் கூறுவர்; செயல்கள்
செய்திடும் நெறியில் சீர்பெற இயங்கிச்
சீவனின் விழைவைச் செயற்படுத்துவதால்.

81. **ம**னம், அறிவு, அகந்தை, சித்தம் எனவே
உள் உறுப்பினைச் சொல்வர்
செயல்வழிப்பிரித்தே
மனம் அது குழப்பமும், மயக்கமும் நிறைந்த
மருள்நிலை; மற்று அவை ஒழித்துத் தெளிவாய்,
இனம் பிரித்து உண்மையை ஏற்பது அறிவாம்;
இவை இரண்டின் அரும் இயல்பினைச் சேர்ந்து,
தனை வெளிக்காட்டும் தான் எனும் அகந்தை;
தடையறும் உள்ளுணர்வு ஒளியது சித்தம்.

82. **நீ**ர் அது ஒன்று, பல் நிலை பெறல் போலே,
நறும் பொன் ஒன்று, பல் உருப் பெறல் போலே,
ஓர் உயிர்ச் சக்தியாய் உலவிடும் பிராணன்,
உதவிடும் செயல்களின் இயல்பினுக்கு ஏற்ப,
சீருறும் பிராணன், அபானம், வியானம்,
உதானம், சமானம் என உருவாகி,
ஓர்வதும், கழிப்பதும், செரிப்பதும், சுழல்வதும்,
நினைப்பதும் ஆகிய நிகழ்ச்சிகள் நடத்தும்.

83. **அ**றிபுலன், செயற்புலன், பிராணன், ஐம்பூதம்,
அறிவு, அறியாமை, அவா, வினை சேரச்
செறிந்து அமை நுண்ணுடல் இலிங்க சரீரம்;
சேர்ந்த நினைவு இட்ட சுவடுகளாலே,
நிறைந்து, முன் வினைப் பயன் துய்க்க நிகழ்த்தும்;
ஆரம்பம் அறியாச் சுமை இது, தான் கொண்ட
அறியாமையினால் உயிரது சுமந்து,
அனுபவம் பலவும் இனங்கண்டு இருக்கும்.

84. **க**னவினில், நுண்ணுடல் தன்னில் தான் ஒளிர்ந்து
தனை வெளிக்காட்டும்; விழிநிலைப் பதிந்த
நினைவுச் சுவட்டினால் நிகழ்ந்த கனவினை,
நேருறத் தானே ஓர்ந்திடும் அறிவு; அது
தனைமட்டும் சுமந்து, தனிப்பெரும் ஆத்மா,
அனைத்துக்கும், சாட்சியாய்த் தனித்தே ஒளிரும்;
தனித்து இருப்பதனால், ஆத்மா, அறிவின்
வினை எதனாலும் பிணைத்தல் உறாது.

85. **வி**னைஞர் கைக் கருவிபோல் விளங்கிடும்,
நுண்ணுடல்,
தனிப் பேரறி வாய்த் திகழ்ந்திடும் ஆத்மா,
தனக்கொரு பொருளாய்; தன்மை அஃதாலே,
தனித்துப் பிணைப்பு இன்றித் திகழ்ந்திடும் ஆத்மா;
அனைத்துக் குறைகளும், விழி, செவி முதலாம்
அங்கங்கள் பெறும் அமைப்பினைச் சேரும்;
அனைத்து அறி உணர்வாம் ஆத்மா தன்னில்
அவை ஒரு நாளும் நிலைப்பது இல்லை.

86. **மு**றைப்படிச் செலுத்தி, மூச்சுக் காற்றினை
இயக்கிடும் பான்மையும், தும்மலும், வியர்த்தலும்,
நிறைந்த கழிவுகள் நீக்கலும், மரணம்
நேர்ந்த பொழுதினில் மேனியை நீங்கலும்,
உறைந்த பிராணன் ஓய்வு இல்லாமல்
நிகழ்த்தும் செயல்களாம்; நாள் தொறும் வாட்டிக்
குறைப்படுத்தும் பெரும் பசியுடன் வேட்கை
கூடிடும் நெறி எனக் கூறுவர் சான்றோர்.

87. **ஐ**ம்புலன் தன்னில் அமைந்து வெளிப்படும்
மனமது, அவற்றுடன் தனை ஒருப்படுத்தி
மெய்ப் பொருள், ஆத்மா மேன்மை கொள் ஒளியில்,
தான் ஒளிர்ந்திருக்கும் பானுமுன் மதிபோல்;
செய்பவன், நுகர்பவன், எனத் தனைக் காட்டும்,
சேர் அகங்காரம் உடலினைச் சார்ந்தே;
எய்த்த முக்குணத்தின் இயல்பினை ஏற்று,
அகம் இது நிலை மூன்று அடைவதை அறிவாய்.

88. **சூ**ழ்ந்திடும் உலகம் சுவையாய் அமைந்தால்
சுகம் அது பிறக்கும்; நிலைமை மாறும்
போழ்தினில் துக்கம் பொங்கிடும் எவர்க்கும்;
பதைப்புறச் செய்யும் மகிழ்விலும், துயரிலும்
ஆழ்ந்திடும் செயல் அது அகந்தையின் இயல்பாம்;
ஆனந்த முழுமை அருள் பானும் பொலிவாய்
வாழ்ந்திடும் ஆத்மா வினை செய்வது இல்லை;
விளைந்திடும் பயன்களில் திளைப்பதும் இல்லை.

89\. அவை தம்முள் ஒளிரும் ஆத்ம உணர்வின்
அருள் இன்றிப் பொருட்களில் அகமகிழ்வு இல்லை
உடம்பினை எரிக்கும் இயல்பிற் செய் ஆத்மா,
உறுதுயர் இல்லாப் பெரும் பேரின்பம்,
கவலையிலாத் துயில், காட்சியில்லாமலும்,
காட்டிடும் ஆத்ம சுகத்தினை; எனவே
அவர் அவர் அனுபவம், முறை, அனுமானம்
அருள்தரு நூல் இவை பொருள்மிக விளக்கும்.

90\. இறைவனின் சக்தியாய் இயங்கிடும் மாயை
இனம் அறியாத் திறம் இயல்புடைத்து ஆகும்;
பிறப்பு அறியாப் பெரும் அறியாமை இது,
முக்குணம் சுமந்து, அவை விளைத்திடும் பயன்களின்
புறத்திலும் இருக்கும்; செறிவு கொள் அறிவினர்
மாயையின் செயலாம் மாயையை உணர்வர்;
பிறப்புறும் அண்ட சராசரம் யாவும்,
மாயையிற் பிறந்து மயக்கிடும் தோற்றம்.

91\. இருப்பதும் இல்லை, மறுப்பதும் இல்லை
இரண்டுமே இல்லா இயல்பதும் இல்லை;
ஒரு பொருள் இல்லை, பன்மையும் இல்லை;
உதிரியாய்ப் பகுதிகள் உறைந்ததோ, அன்றி
மரு இலா முழுமையோ, மற்று அவ் விரண்டுமோ,
எதுவுமே இல்லை; மாயையின் எல்லை,
அருகிலா, தொலைவிலா அறிந்தவர் இல்லை;
அற்புதம் வார்த்தையால் அளப்பதும் இல்லை.

92\. பழுதையின் உண்மை பக்குவம் அறிந்திடப்
பயந்தரும் பாம்பது மறைந்திடல் போல,
முழுமையாம் இணையிலா விழுப்பொருள் பிரம்மம்,
முனைந்து அறிந்திட வே மறைந்திடும் மாயை;
அழுத்திடும் மாயை அதன் இயல்பாக
அமைந்திடும் மூன்று குணங்களும், அதனால்
எழுந்திடும் செயல்களின் இனப்படிச் சத்துவ
இரஜோகுணம், தமோகுணம் எனும் பெயர் ஏற்கும்.

93. **தோ**ற்றிடும் சக்தியைத் தாங்கும் இரஜோகுணம்,
இயக்கமே இயல்பாய்த் துலக்கியது உலகை;
மாற்றம் கொள் மனதில் மகிழ்ச்சியும், துயரும்,
தொடர்ந்து அளித்தே எங்கும் தொடர்ந்திடும்
அதுவே;
ஆற்றொணா ஆசை, கோபம், பொறாமை,
பெருமை, அகந்தை, வெறுப்பு எனும் இயல்புகள்,
ஏற்று இங்கு மனிதனை இச்சையிற் படுத்தி,
இறுகப் பிணைக்கும் தன்மை இரஜோகுணம்.

94. ஒன்றினைப் பலவாய் உருக்கொள்ளக் காட்டித்
திரையிடும் சக்தியைச் சுமக்கும் தமோகுணம்,
தொன்று தொட்டே வரும் பிறப்பு இறப்பைத் தந்து,
தோற்றிடும் சக்திக்கு ஆற்றல் அளிக்கும்;
நன்று நூற்பொருள் நிறைந்து அறிந்தோரும்,
சூழும் பொய் மயக்கத்தைச் சார்ந்து,
மெய்ப்பொருளை
நின்று அறியாநிலை நிகழ்த்தும் தமோ குணத்
திரையிடும் சக்தியின் திறன் மிக வலிதாம்.

95. **மு**றையாய் அறிந்திட மறத்தலும், இயல்பைத்
தவறாய் அறிதலும், அறிந்திடும் முடிவில்
நிறைவு அடையாத நிலைமையும், குழப்பமும்,
நீங்குவதில்லை எவரையும் - மெய்யை
மறைத்திடும் சக்தியின் மருளினிற் சிக்கி,
மயங்கிடும் பொழுதினில் ; மற்று அந்த மயக்கச்
சிறையினில் தவிக்கையில் உருத்தரும் சக்தி,
நிறைத்திடும் துயரினை, நெஞ்சில் எந்நாளும்.

96. **ம**ருளுடன் சோம்பலும், மந்தத் தன்மையும்,
மயக்கிடும் துயரும், முயற்சி இல்லாமையும்,
இருள் எனச் சேரும் மௌடகமும் - இவை
இயல்பு எனக் கூறுவர் தமோகுணம் தனக்கே;

கருள்பட மடங்கித் துயில்பவர் போலே,
சூழ்நிலை அறியாச் சிலையது போலே,
பொருள் எதும் அறியாப் பான்மையிற் கிடப்பர்,
இக்குணத்து இயல்பில் சிக்கிடும் அவரே.

97. **சா**த்விகம் நீர் எனத் தூய்மை பெற்று இருந்தும்,
சார் தமோ, இரஜோகுணச் சேர்க்கையினாலே,
பாத்திரம் ஆக்கும் பிறப்பு, இறப்பு வரும்
வாழ்வினுக்கு எவரையும், வாழ்ந்திடும் உலகில்,
மூத்த கதிரொளி மூழ்குவதாலே
முன் அறி உலகம் ஒளிர்வது போலே,
ஆத்ம ஒளி பெற்றுச் சத்துவம் ஒளிரும்;
பொருள்களின் இயல்பினைத் தெளிவுற விளக்கும்.

98. **நி**னைவில் தான் எனும் கருவம் கொள்ளாமை,
நியம, யம நெறி நிலைத்திடும் பான்மை,
முனைந்து, பக்தியில் மூழ்கி, வாழ்வினை
முற்ற ஒழித்திடும் முயற்சியில் ஆசை,
அனைய பண்புகள் நிறைந்து, பொய்மையை
அகன்று விலகியே - தெய்விக அருளில்
நனையும் தன்மையை, இருகுணம் பிறவுடன்
கலந்து சாத்விகம் கனிந்து நல்கிடும்.

99. **இ**னிமையும், தன்நிலை உணர்ந்திடும் இயல்பும்,
இணையிலா அமைதியும், தனையிலா நிறைவும்
கனிந்திடும் மகிழ்வும், கடந்த மெய்ப் பொருளாம்,
ஆத்மா தனைவிட்டு அகலாச் சிந்தையும்
தனித்த தூய்மையிற் பொலிந்திடும், சத்துவ
குணத்தின் இயல்பு எனக்கூறுவர் சான்றோர்;
மனிதர் எவரும் இம் மாண்பினைச் சேர்ந்திட,
மருவிலாது என்றும் மகிழ்வினை எய்துவர்.

100. **நி**றைந்த முக்குணங்கள் முறைமையிற் பிணைந்து,
மறைந்து உள மாயையே காரண உடல்; அதன்
சிறந்த நிலை, மனம், புலன் அவை யாவும்,
செயல் இழந்து ஒடுங்கும் இயல்பு கொள் உறக்கம்

மறந்த துயிலினில் மனம் வெறும் கருவாய்
விளங்கும்; உணர்வு எதும் விளங்கா நிலை அது;
'அறிந்தது இல்லை நான் எதையும் அப்போது' என
அகிலத்தில் எவரும் துயில்பற்றிச் சொல்வர்.

101. **மே**னியும், புலன்களும், பிராணனும், மனமும்,
அகந்தையும், பொருள்களும், அவைதரும் உணர்வும்
வான் முதற் பூதமும், வையமும், மாயையும்,
அனைத்துமே ஆத்மனுக்கு அயல் என அறிவாய்;
ஆனவை அனைத்தும் மாயையின் விளைவாம்;
அண்டம் முதல் உடற் பிண்டம் வரையும்,
தானவை யாவும், மாயையும், பொய்யாம்,
தகித்திடும் பாலைக் கானல் நீர் எனவே.

102. **அ**டுத்ததாய் உனக்கு நானும்,
ஆத்மாவின் இயல்பைச் சொல்வேன் - தளை
விடுபடும், வீட்டின் இன்பம்
விளங்கிடும் உணர்ந்த போதே.

103. **அ**கம் உணர் முழுமை ஒன்று,
அடிப்படை நிலையாய் நிற்கும் - சாட்சியாய்த்
திகழ்ந்திடும் முந்நிலைக்கும்,
கடந்ததாம் உறைகள் ஐந்தும்.

104. **வி**ழிப்போடு கனவு, உறக்க
விளைவினை அறியும்; காணும் - மனத்தின்
எழுச்சியை, ஓய்வை; மூலம்
அகந்தைக்கு இங்கு - அதுவே ஆத்மா.

105. **அ**னைத்தையும் அறிந்து இருக்கும்,
அதனை ஒன்று அறிவதில்லை - அறிவுடன்
அனைத்திலும் ஒளிர்ந்து இருக்கும்
அவற்றினால் ஒளிரா ஆத்மா.

106. **வெ**ளி எலாம் பரந்திருக்கும்,
வேறு இதில் பரவல் இல்லை - தனது
ஒளி அதன் பிரதி பலிப்பால்,
உலகினை விளக்கும் ஆத்மா.

107. **எ**ப்பொருள் இருப்பதாலே,
உடல், புலன், மனமொடு அறிவும் - இயங்கிடும்
தப்பிலா அடிமை போலே,
தலைமை அப் பொருளே ஆத்மா.

108. **கூ**டிடும் அகந்தை, மேனி,
கொள்புலன் மகிழ்ச்சி யாவும் - தெளிவாய்க்
கூடு எனக் காணுகின்ற
நிலைத்த பேரறிவே ஆத்மா.

109. **தொ**ன்மை இவ் வந்தராத்மா,
தொடர் நிலைப் பேரானந்தம் - மனப்
பன்மையிற் பிரதிபலித்துப்
புலன், உயிர் தமை நடத்தும்.

110. **உ**டலினுள், சாத்விகம் கொள்
மனத்தினுள், அறிவு மைய - இடத்தினில்
வடிவிலா வெளியில் ஆத்மா,
வான்கதிர் ஒளிர்ந்திருக்கும்.

111. **அ**றிந்திடும் அக, மன மாற்றம்,
உடல், புலன், உயிர் இயக்கம் - தம்போல்
பெறும் உரு - இரும்பில் தீ போல்;
செயல் இன்றி, மாற்றம் இன்றி.

112. **நி**லைத்திடும்; பிறப்பு இறப்பு,
வளர்சிதை மாற்றம் இன்றி - மேனி
தொலையினும் இருக்கும் – பாண்டம்
உடையினும் அழியா வெளிபோல்.

113. **பு**கழ்ச்சி கொள் உலகம் யாவும்
புலப்படச் செய்யும்; மூன்று - நிலையிலும்
அகந்தையைத் தளமாய்த் தாங்கி
அறிவுக்குச் சாட்சியாகும்;
நிகழ்ந்திடும் மாயை கொள்ளும்,
நிலையினில் வேறுபட்டு- இயல்பாய்த்
திகழ்ந்திடும் முழுமை, உண்மைத்
தனிப்பெரும் ஞானம் ஆத்மா.

114. **நெ**றிப்படு மனமும், தூய
புத்தியும் கொண்டு உந்தன் - இயல்பினை
அறிந்து, இப் பிறப்பிலேயே
அதனுடன் ஒருமை கொள்வாய்;
பிறப்பு, இறப்பு அலைகள் வீசும்,
பெருங்கடல் இதனை நீங்கி - பிரம்மச்
சிறப்பு, நின் சாரம் தன்னில்
சேர்ந்து, நீ அருளில் வாழ்வாய்.

115. **அ**வித்தையின் விளைவினாலே,
அயல் இதைத் தான் என்று எண்ணிப்
பிணைப்பிதனை
தவிப்பினில் அடிமைப் பட்டுப்
பிறப்பு, இறப்பு அழிவில் நோவர்;
புவிப்படும் மெய்யை, மெய்யாய்ப்
போற்றி, நீராடித், தீனி - புலன்வழி
குவிப்பர் இப் பாந்தர் - பட்டுக்
கூட்டினால் அழி புழுப் போல்.

116. ஒன்றினில் வேறு ஒன்றை,
உணர்த்திடும் மாயைப் பட்டுப் - பிரித்து
நன்று உணர் சிந்தை இன்றி,
நாகத்தைக் கயிறாய் எண்ணிச்
சென்று கைப் பிடிப்பர் ; சோர்வர் ;
இவ்விதம் பொய்மை, மெய்மை
என்றிடப் பிறக்கும் பந்தம்;
இயல்பினில் அறிவாய், நண்பா.

117. நிறைவு கொள் கதிரைச் சூழும்
இராகுபோல் தாமஸந்தான் - மூடி
மறைத்திடும் ; புகழ் நிலைத்த,
இணையிலா ஆத்ம ஜோதி
குறைவுறத் தோன்ற மேனிக்
கூட்டினை மெய்யாய்க் காட்டும் - உடனே
சிறையிடும் இராஜஸந்தான்,
அவாச் சின விலங்கைப் பூட்டும்.

118. நெறிச் செலா அறிவு கொண்டோர்
நெஞ்சினில் ஆத்ம ஞானம் - அறியாமை
வெறிச் சுறா வயிற்றில் வீழ,
வகை பல நிலைகள், கொள்ளும்
அறிவதன் இயல்பை ஆத்ம
இயல்பென எண்ணிப் புலன்கொள் -
மகிழ்வெனும்
செறிவிஷச் சமுத்திரத்தில்
எழுவர், பின் வீழ்வர், அந்தோ!

119. முகிலது கதிரால் வந்தும்
மூலத்தை மறைத்து நிற்கும் - முறைமையில்
அகமிது ஆத்ம மூலம்
மறைத்துத் தன் முகத்தைக் காட்டும்;
பகலென் தெரியா வண்ணம்
பரவிய மேகக் கூட்டம் - பொழியும்
மிகுமழைக் குளிரும் காற்றும்
மனிதரை வருத்தும் : அந்தத்

120. தகைமையில் ஆத்மா தன்னை
அறியாமை மூட, மூட மனிதரைத்
திகைப்புறத் துயரில் வீழ்த்தும்
தோற்றம் செய் திறம் கொள் சக்தி;
திகழும் இவ் விரண்டு சக்தி
தாம் விரி வலையில் வீழ்ந்து - மயக்கம்
மிகுந்த மேனி, தான் என்று
உலகில் பல் பிறவி கொள்வர்.

121. **அ**றிவின்மை விதை, இம்மேனி
தான் எனல் முளை, ஆசைகள் - தளிர் இலைகள்,
இறைத்து நீர்ச் செயல்கள் ஊற்ற,
இவ்வுடல் அடி மரத்தில்,
பிறந்திடும் கிளைகள் பிராணன்
புலன், பொருள் காம்பு, பூவாம் - கனியாம்
செறிவினைப் பயன், சேர் ஜீவன்
பறவையாம், மரம் சம் சாரம்.

122. **மு**ன் ஒரு தொடக்கமும், பின்
முடிவெதும் அறிந்திடாத - இந்தத்
தன் அறியாமையாற் கொள்
தனக்கயற் பிணைப்பினாலே,
இன்னலாம் பிறப் பிறப்பும்
இடும்பை நோய், முதுமை யாவும், சேர்ந்து
பன்னெடுங் காலம் நம்மைப்
பதைப்புற வருத்தும் இங்கே.

123. **எ**வ்வகைக் கணையினாலும்
நெருப்பு, நீர், காற்றினாலும் - செய்யும்
அவ்வினை கோடியாலும்
அழிவுறா இப்பிணைப்பை
செவ்விய பகுப்பிற் செய்து
சிந்தையின் தூய்மையாலே - தீட்டிய
அவ்வொரு ஞான வாளே
அறுத்திடக் கூடும் முற்றாய்.

124. **மே**ன்மை நூல் மொழிகள் பற்றித்
தன்நிலை தெளிவாய்க் கண்டு - நிலையாய்த்
தான் அதில் நிலைக்கும் போது
தூய்மையால் மனம் சிறக்கும்;
ஈனம் இல் தூய நெஞ்சம்
எய்திடும் ஆத்ம ஞானம் - சம்சார
வான்தொடும் மரம் வேரோடும்
வீழ்ந்திடும் அந்த நேரம்.

125. **அ**ன்னமயக் கோசம் முதல் ஐந்து திரையாவும்,
தன்மாயைச் சக்தியினால் தோன்றிடினும் ஆத்மா,
அன்னவற்றுள் மறைந்திருக்கும் - குளத்தில் எழும்பாசி
தன் படர்வால் நீர்ப்பரப்பைத் தான் மறைத்தல் போலே.

126. **பா**சியினை நீக்கிவிட்டால் வேட்கை ஒழிந்தோட,
மாசறுநீர் காத்திருந்து மகிழ்வுதரும்; ஐந்து
கோசம் தனை நீக்கிவிட நித்தியானந்தமாய்த் தன்
தேசில் ஒளிர் பரமாத்மா நெஞ்சினுள்ளே விளங்கும்.

127. **அ**யற்பொருளும் ஆத்மாவும் பிரித்துணர்ந்தே அவற்றின்
இயல்பறிவர் பிணைப்பறுக்கும் விழைவுகொள்நல் அறிஞர்
முயற்சியினால் தன் வடிவம் மெய், ஞானம், இன்ப
மயம் எனவே உணர்ந்து பெரும் மகிழ்வினிலே நிலைப்பர்.

128. **உ**ணர்ந்தறியும் பொருளனைத்தும் ஒதுக்கி, மனத்துள்ளே
பிணைப்பறியா, செயலறியா, ஆத்மாவைக் காண்போர்,
பிணைப்பறுப்பர், அனைத்துலகும் அதிற்கலந்தே என்றும்
இணக்க முற நினைத்திடுவர் அதன் இயலாயிலே நின்றே.

129. **அ**ன்னத்தினாற் பிறந்த உடல் அன்னமயக் கோசம்,
அன்னத்தினால் வாழும் இன்றேல் வீழும் இந்த உடலைப்
பின்னியவை தோல், இரத்தம், சதை, எலும்பும், மலமும்,
தன்னில் நிலை தூயவாத்மா, தான் உடல் இஃதில்லை.

130. **இ**ருக்கும் ஒரு சிறு பொழுதே, சாவு பிறப்பிடையே
உருப்பலவாய், நிலை பலவாய், குடம் அன்னவோர்
பொருளாம்
ஒரு ஜடமாய் இருக்கும் உடல், அனைத்து நிகழ் மாற்றம்
இருந்தறியும் ஆத்மாவாய் எவ்விதமாய் ஆகும்?

131. **கை**யொடு கால் சேர்ந்த உடல் அவற்றில் ஒன்றை
நீக்கம்
செய்திடினும், சிறப்புடனே தான் இருக்கும்,
இயங்கும்
'ஐயை' என மனத்தடிமை ஆன உடல் என்றும்
மெய்மை மிக ஆட்சி செய்யும் ஆத்ம வடிவில்லை.

132. **ஊ**ன் இடையே எலும்பு வைத்த மலக்குடமாய்
நாறும்
மேனி இதன் இயல்பு, செயல், மாற்றம் இவை
நோக்கித்
தான் அறியும் மெய்ப் பொருளாய்த் தனித்திருக்கும்
ஆத்மா
மேனியிலும் வேறெனவே மிகத் தெளிவாய்
விளங்கும்.

133. **க**லந்தெலும்பும், நிணம், கொழுப்பும், குருதியும்
தோல் போர்த்து,
மலம் அமைத்த மேனி எனத் தனை நினைப்பர்
மூடர்;
நலம்கொள் பகுத்தறிவுடையோர் மேனியிலும்
வேறாய்
இலங்கிடு மெய்ப்பொருள் எனத் தன் இயல்பினை
நன்கறிவர்

134. **தே**கம் எனத் தனை நினைப்பர் மூடரவர்; ஜீவன்
தேகம் இவை தாம் என்பர் நூலறிஞர்; பொய்,
மெய்ப்
பாகுபடுத் தறி முனிவர் 'பிரம்மம் நான்' என்ற
ஏகநிலை உணர்ந்து ஆத்ம இயல்பினிலே திளைப்பர்.

135. **ச**தை, கொழுப்போடு, எலும்பு, மலம் தோலுள்
வைத்தமேனி
இதை வளர்க்கும் விருப்பொழிந்து ஓர்
இணையில்லாப் பிரம்மம்
அதை அனைத்தின் மூலம் என அறிந்த தனிற்
கலந்து,
இதயத்திலே சாந்தி மிகும் இயல்பினை நீ
பெறுவாய்.

136. **சொ**ல்லும் உயர் வேதாந்தச் சிறப்பனைத்தும் கற்ற
வல்லவரும் விடுபடுதல் இல்லை; அவர் பொய்யாம்
தொல்லைதரும் மேனி, புலன் இவை வகுத்த
சிறையின்
எல்லையினைத் தன்னியல்பாய் எண்ணும் வரை
உலகில்.

137. **நி**ழலினையோ, நீரினிலே பிரதிபலித்துத்
தோன்றும்
எழிலினையோ, கனவுடலின் இயல்பினையோ,
நினைவுச்
சுழலில்வரும் உடலினையோ சேர்வதுண்டோ?
ஜீவன்
உழல் உடலும் அவ்வகையே, நீயல்ல
என்றறிவாய்.

138. **உ**டலுடனே ஒருமை கொள்ளும் உணர்விதுவே
வாழ்க்கை
இவர் அனைத்தும் வளர்வதற்கே இருக்கும் ஒரு
மூலம்
மடமை இதை முயன்றுனது சிந்தையிலே எரித்தால்,
தொடர்ந்து வரும் பிறப்பிறப்புத் தொல்லையில்லை
உனக்கே.

139. நடத்தும் உயிர் மூச்சும் - செயல் நிகழ்த்தும்
புலன் ஐந்தும்
அடக்கம் தனிற் கொள்ளும் - அது பிராண மயக்
கோசம்
படர்ந்துள் நிறைகின்ற - இதன் பார்வை உயிர் நல்க
நடத்தும் செயல் யாவும் - நேராய் அன்ன மயக்
கோசம்.

140. காற்றின் உருமாற்றம் - உடல் நுழையும்
வெளிப்போகும்
ஏற்கும் துயர், இன்பம் - தமை அறியாது, அயலவர்
கொள்
மாற்றம் உணராது - உயிர் மூச்சுத் திரை, ஆத்ம
ஏற்றம் தனைச் சாரும் - ஆத்ம இயல்புக்கு
அயலாகும்

141. அறிபுலனொடு மனம் உறுப்பெனச் சேர்வது
மனமயக் கோசமிது;
பிறந்திடும் அகந்தையும், மமதையும் இங்கே
பயந்திடும் மூலமிது;
திறம்படப் பலவகைப் பிரிவுகள் தோற்றிடும்
சக்தி கொள் வடிவமிது;
உறைந்து ஊடுருவி உயிர் மூச்சு நிறைக்
கோசத்தை ஒளிர்ப்பதிது.

142. அந்தணராய்ப் புலன் ஐந்தும், பொருள்வழி
விழை வினை விறகெனவே,
தந்து வளர்த்திடக் கொழுந்து விடும் மன
யாக நெருப்பிதுவே;
முந்தும் அவிர்ப்பலி என நுகர் பொருள்களை
முடிவின்றிச் சொரிந்திடவே,
சுந்தரமாய் எழும் உலகங்கள் உள் மன
வேள்வியின் பயன் எனவே.

143. **ம**னத்தினுக் கயலாய் அறியாமை எனும்
இருள் எங்கும் இருப்பதில்லை;
அனைத்து அறியாமையும் மனமே, அதுவே
பிறவியிற் பிணைக்கும் தளை;
மனத்தினை ஒழித்திட மயக்கிடும் உலகெனும்
மாயையும் ஒழிந்து விடும்;
மனத்தினை எழுப்பிடப் பலவகைத் தோற்றமும்
மறுபடி எழுந்து விடும்.

144. **க**னவினில் புறத்தமை உலகங்கள் காட்டும்
காட்சி இல்லாதிருந்தும்,
தனக்கென உலகொன்றைத் தனைக்கொண்டு தானே
மனம் உருவாக்கி விடும்;
நினைவுகொள் விழிப்பெனும் நிலைதரும் காட்சியும்
இயல்பினில் இவ்விதமே
மனத்தெழும் உணர்வுகள், பெயர், வடிவெனக்கப்
பிறந்திடும் அற்புதமே.

145. **உ**றங்கிடும் பொழுதினில் மனம் அதன் மூலத்தில்
ஒன்றிடும் காரணத்தால்,
அறிந்திடப் பொருள் எதும் இல்லை அங்கே என
அனைவரும் அனுபவத்தால்
திறம்பட உணர்வர்; அத் தன்மை விளக்கிடும்
சம்சாரம் இதுவே
பிறப்பது மனத்தின் இயக்கத்தினால், அது
மெய்ம்மை இல்லை எனவே.

146. **கா**ற்றின் இயக்கத்தில் முகில்கள் குவிந்திடக்
கதிரொளி மறைந்திருக்கும்;
காற்றின் இயக்கத்தில் முகில்கள் கலைந்திட
மறுபடி ஒளிர்ந்திருக்கும்;
ஆற்றல் கொள் மனமே அடிமைத் தனத்தினை
மனிதருக்கு அளித்திருக்கும்;
ஆற்றல் கொள் மனமே அத்தளை நீக்கி, நல்
விடுதலைச் சுகமளிக்கும்.

147. உடலுடன் பொருள்வழி உலவிடும் ஆசையை
மனம் வளர்த்தே அவற்றால்
இடர்ப்படப் பிணைத்திடும், கயிற்றினைக்
கொண்டொரு
விலங்கினைப் பிணைப்பதுபோல்;
படரும் அவ் விழைவினை வெறுப்பெனத்
திரிப்பதும்,
பொருள்களை நச்செனவே
தொடவும் மறுத்திடும் தன்மை தந்தே தளை
தவிர்ப்பதும் நம் மனமே.

148. அடிமைத் தனத்தையும் விடுதலைச் சிறப்பையும்
அளிப்பது நம் மனமே;
படியும் இராஜஸப் பான்மை மிகுந்திடப்
பாழ்படும் சிறையினிலே
நொடிக்கும் நிலைபெறும்; இராஜஸத் தாமஸக்
குணங்கள் ஒழிந்திடவே
விடியும் விடுதலை, கறைகள் இல்லாதொளிர்
தூய மனத்தினிலே.

149. பகுத்தறி திறமும், பற்றறு நிலையும்
படர்ந்து நிறைவதனால்
மிகுந்திடும் தூய்மையில் மனமது இயல்பாய்
முக்தியில் நாட்டம் கொள்ளும்;
தகும் இவை இரண்டையும் தளர்வற வலிவாய்த்
தாங்கி வளர்ப்பது, மெய்
வகுத்திடும் வழியினை விழைந்திடும் அறிஞர்
ஏற்கும் இயைந்த முறை;

150. உறுபுலன் நிறைக்கும் மகிழ்வெனும் மரங்கள்
ஓங்கி வளர்ந்த வனம்;
சிறுத்தை என்றதிலே அலைந்து கொண்டிருக்கும்
பதுங்கி மறைந்து மனம்;

வெறுத்ததை ஒதுக்கி, வேறு வழிச் செல்லல்
வாழ்க்கை விலங்கு தன்னை
அறுத்திடும் ஆசையில் அமைபவர் எவர்க்கும்
அவசியம் முதற் கடமை.

51. பருப்பொருள், நுண்பொருள் பலவகை யாவும்
தடையின்றி வார்த்திருக்கும்;
உருக்கொளும் மேனி, ஜாதி, மதம், குல
வேற்றுமை போர்த்திருக்கும்;
பொருந்திய தகுதிகள், செயல், குறிக்கோள், பலன்
எனும் இவை சேர்த்திருக்கும்;
விரும்பி நுகர்ந்திடும் மனிதர்க் கெல்லாம் இவை
மனம் தந்து பார்த்திருக்கும்.

152. ஒட்டுதல் ஒன்றிலா உயர்தனி அறிவாம்
ஜீவனை, மனம் மயக்கிக்
கட்டிவிடும், உடல், புலன், உயிர் மூச்செனும்
கயிறுகளால் இறுக்கி;
முட்டிவரும் செயற்பலன் தரும் அனுபவ
வகை நடுவே நிறுத்தி,
இட்டமுடன் 'நான்', 'எனது' என ஜீவனை,
இயக்கிடும் மனம் நடத்தி.

153. மிகுபடச் சுமந்த பொய்மையின் வலிவால்
சம்சாரம் எனும், பாழ்ச்
சகதியில் வீழ்வர் மனிதர், அப்பொய்ச்சுமை
தனை மனம் தருகின்றதால் :
பகுத்தறிவின்றிப் பாய்ந்திடும் இராஜஸத்
தாமஸக் குணங்களினால்
வகுபடும் நெறிசெல்லும் மனிதர்கள், பிறப்பினைத்
துயர் கொள்வர் இச்சுமையால்.

154. நெடுங்கடல் பிறவியைக் கடந்து, மெய்ப்பொருளின்
நிலை உணர் ஞானியரே,
தொடரும் இவ்வியல்பால், 'மனம் - அறியாமை'
எனக் கண்டு கூறுவரே!

கடும்புயல் காற்றினில் அலைந்து திரிந்திடும்
முகில்களின் இயல்பெனவே,
நடுங்கி அலைப்புறும் உலகம் எல்லாம் மனம்
நடத்திடும் வழியினிலே.

155. மெய்ப் பொருள் விழைந்திடும் மனிதர்கள் எவரும்
மனத்தினைத் தூய்மை பெறச்
செய்திட வேண்டும், தளர்ச்சி இல்லாமல்;
மனம் அது தூய்மை பெற
எய்துவர் முக்தியை மிக எளிதாய் இங்கு
ஏந்திய அவர் இரண்டு
கையினில் சேர்ந்திடும் கனி, எனவே பொங்கிக்
களி கொள்ளவே நிறைந்து.

156. ஒரு முனைப் படுகின்ற நெறியினில் முக்தியை
விழைந்து, புலன் நுகர்வில்
விருப்பம் ஒழித்துச், செயல்கள் அனைத்தையும்
விளைவுடனே ஒறுத்துக்
கருத்தினை மெய்மையில் நிறுத்தி, நற்கேள்வி,
சிந்தனை, தியானம் இவை
விருப்புடன் பயிலுதல் இராஜஸ இயல்பினை
அறிவினில் ஒழிக்கும் வழி.

157. தொடக்கமும், முடிவும், நொடி ஒரு நிலையும்
சுமந்து, இயல்பினிலே
இடர்தரும் துயரும், வருத்தமும் நிறைந்து
அறிந்து உணர் பொருளெனவே
தொடர்ந்திடும் மனம் அது, கடந்த மெய் ஆத்மா
எனச் சொல்லல் நியாயமில்லை;
கிடந்து அறி பொருள் என்றும் அறிபவர் தம்முடன்
ஒரினம் ஆவதில்லை.

158. அறிவுடன் அது கொள்ளும் மாற்றம்,
அனைத்தும், அறிபுலன் யாவும்
செறிந்தது அறிவு மயக் கோசம்;
சேர்ந்திடும் செயல்களை, நன்றாய்

நெறிபட இயக்கிடும் கர்த்தா,
என்கின்ற நினைவினைச் சுமந்து,
பிறப்பு, இறப்பு, இ ர்தனை மனிதர்,
பெற்றிடக் காரணம் இதுவாம்.

159. நிறையும் உள் உணர்வெனும் சுடரின்
பிரதிபலிப்பை மிகச் சுமந்து,
பிறந்தது, பிரகிருதி ஏற்ற
பொலிவுகொள் அறிவு எனும் வடிவம்;
சிறப்புற அறிந்திடும் செயலைச்
செய்வது இயல்பாய், இங்கே
இறந்திடும் உ ட ல், புலன் இவற்றின்
தன்மையில் இலயிப்பது அறிவாம்.

160. முன் ஒரு தொட க்கம் இல் பொருளாம்.
அகந்தையின் இட ம் இந்த அறிவாம்;
சொன்னநம் ஜீவனும் இதுவாம்;
வாழ்வின் அனைத்து நிகழ்வும்
பின்னி இங்கு இயக்குவது இதுவாம்;
நன்மையும், தீமையும் மிகவே
முன்வினை வழிச் செயல் நடத்தி,
மூளும் பலன் நுகர்வதுவாம்.
161. பல்வகை உ ட ல்களை அடைந்து
பிறவிகள் மேலாம், கீழாம்
எல்லையின் இடை யினில் உ லகில்
வருவதும், போவதும் இதுவே;
நல்விழிப்பொடு, கனவு, உ றக்கம்
நிலைகளும் இதற்குள்ள சிறப்பே;
அல்லலும், மகிழ்வும் கொடுக்கும்
அனுபவம் பெறுவதும் அறிவே.

162. மேனியின் வாழ்க்கை நெறிகள்,
கட மைகள், செயல்கள் இவற்றை
தான் கொண்ட து, எனவே தவறாய்க்
கருதிடும் அறிவு எனும் திரைதான்

ஊனம் இல் ஆத்மனுக்கு அருகாய்
இருப்பதனால் மிக ஒளிரும்;
தான் இந்தச் சுமை என நினைத்தே
ஆத்மா பிறவியில் தவிக்கும்.

163. **வி**ரிந்த பேரறிவாய் விளங்கும்
ஆத்மா, பிராணனின் இடையில்
எரிந்திடும் சுடர் என ஒளிரும்,
இதயத்தின் பீடம் அதனில்;
திரிவிலாது இருந்தும் செய்வோன்,
நுகர்வோன் எனும் நிலை ஏற்கும்,
தரித்திடும் பொய்த்திரை அறிவின்
இயல்பினைத் தான் எனக் கண்டே.

164. **இ**ருந்திடும் பொருள்கள் அனைத்துள்,
இயல்பாய் இருந்திடும் ஆத்மா,
வருந்திடும், அறிவதன் வலையில்
விழுந்தே, பொய்மை இந்நிலையைப்
பொருந்திடும், தனைத் தனக்கு அயலாய்
நினைத்தே; மண்ணில் ஓர் உருவாய்
அரும்பிடும் குடம் அந்த மண்ணுக்கு
அயலாய் நினைத்திடும் நிலையில்.

165. **ம**ருவுடன், பலவகை மாற்றம்
இல்லா இணையிலா ஆத்மா
பெறும் அதன் திரைகளைப் பொருந்தி,
அலைகொளும் இயல்பினைச் சுமந்தே,
செறும் நெருப்பு இணைப்படும் இரும்பின்
வடிவதை, நெருப்பு இயல்பாகப்
பெறும் வகை கருவிகள் நிகழ்த்தும்
செயல்களைத் தனது என நினைக்கும்.

166. சீடன் கேள்வி :

தொடும் மருள் பிடியினாலோ - வேறு
வகையிலோ ஜீவன் என்றே
நெடும் பொருள் ஆத்மா, தன்னை - இங்கே
நினைத்திடும் இயல்பினுக்குத்
தொடக்கம் ஒன்று இல்லை என்றே - தாங்கள்
சொல்வதில் உண்மை கண்டேன்
தொடக்கம் ஒன்று இல்லை என்றால் - பின் ஓர்
முடிவும் அங்கு இல்லை அன்றோ?

167. இவ்விதம் எண்ணிப் பார்த்தால் - ஜீவ
இயல்பதும் மாறுவதில்லை
வெவ்வினைப் பிறப்பு இறப்பும் - நம்மை
விடுத்திட வழியும் இல்லை
எவ்விதம் ஜீவன் இங்கே - விடுதலை
எய்திடக் கூடும் பின்னே?
இவ்வகை எனக்கு உரைப்பீர் - குருவே
இலங்கிடும் கருணையாலே.

168. குருமொழி :

நன்று நீ கேட்டனை, நல்லறிவுடையோய்!
பின், இதைக் கருத்துடன் கவனமாய்க் கேட்பாய்;
என்றுமே, மயக்கத்தில் எழுந்திடும் கற்பனை,
நின்ற மெய் அதில் நிகழுவது இல்லை.

169. மருளினால், வானிடைக் காண்கின்ற நிறம்போல்,
உருவிலா, ஒட்டுதல் ஒன்றிலாச் செயல்கள்
மருவிடா ஆத்மா, புற உலகில் நிறை
பொருள் அறிவதும் அம் மருள் இன்றி இல்லை.

170. அனைத்து அறி சாட்சியாய், ஆனந்த, ஞானமாய்
வினை, குணம் கடந்ததாய், மனத்து உணர் ஆத்மா,
புனைந்திடும் ஜீவிதம், மயக்குறும் அறிவால்;
முனைந்து அந்த மருள் கொல்ல மறையும்
அப்பொய்மை.

171. குழம்பிய அறிவினில், தவறாய்க் கணித்திட
எழுந்திடும் ஜீவிதம், மருள் அதனோடே
ஒழிந்திடும், கயிற்றினில் உருக்கண்ட பாம்பு
பழுதை என்று அறிந்திட மறைந்திடும் இயல்பில்.

172. பிறப்பு இலா அறியாமையும், அதன் விளைவும்
இறந்திடும் - ஞானத்தில்; விழிப்பினில் கனவு என;
சிறப்புறும் உலகமும் நிலையில்லை - முன் அது
பிறந்திடா நிலைபோல்; பொருள் இது தெளிவாம்.

173. முன் இலா நிலைமை, முதல் இலாது இருந்தும்
பின் அது முடிந்திடல் போலவே, ஆத்மா
தன்னையே, பொய்மையாம் அறிவு அதன்
இயல்புடன்
பின்னியே ஜீவனாய்த் தனை நினைத்து
இருக்கும்.

174. உண்மையில் ஆத்மா, ஜீவன் தான் கொள்ளும்
பண்பினைச் சேராத் தனிப் பொருள் ஆகும்;
கண்ணுறும் ஆத்மா, அறிவு இடை உறவு
நண்ணிடும் பொய்மை அஞ்ஞானத்தின்
விளைவாம்.

175. மெய்நிலை ஞானம் முழுமையாய்க் கூடிடப்
பொய்மையின் திரையாம் இருள் ஒழிந்து ஓடும்;
உய்வழி சொலும் நூல், 'பிரம்மனோடு ஆத்மா
ஐக்கியம் காணல் மெய் ஞானம்' என்று
உரைக்கும்.

176. இவ்வரும் உணர்வு, ஆத்மா, அயல் இவை
செவ்விதிற் பிரித்து அறி சிந்தையில் விளங்கும்;
இவ்விதம் ஆத்மா, பரமாத்மா எனும்
அவ்விரு நிலை தெளிந்து அறிந்திடல் முறையாம்.

177. கலங்கிய சேற்றினைத் தெளிந்திட வைத்து
நலம்கொள்ள வடித்தால் பொலிந்திடும் நீர், என
இலங்கிடும் ஆத்மா, இயல்பில்சேர், பொய்மை
மலங்களைக் களைந்திட, மரு இலாச் சுடராய்.

178. உள்நிறை ஆத்மனே ஓங்கிய பரம்பொருள்
தெள்ளிதில் விளங்கிடும் பொய்மையின் வீழ்ச்சியில்
உள் இதை உணர்ந்தே, அகந்தை முதல் அவை
தள்ளியே, பரம்பொருள் தனைக் கொளல்
முறையாம்.

179. அலைவுறும் ஜடமாய், வகுத்ததோர் எல்லையுள்
நிலைத்திடும் நாம் உணர் பொருளாய்த், தொடர்ந்து
இலா
நிலைகொளும் அறிவு எனும் அழிவுறு பொய்மையும்
நிலைத்த பேராத்மா நிலை பெறற்கு இல்லை.

180. ஆனந்த மயக்கோசம், அறியாமையின் தோற்றம்;
ஆனந்த முழுமை, அவ் வாத்மாவின் அருட் சாயல்
தான் இங்கு கொண்டு இன்பம் தருகின்ற இயல்பு
ஏற்கும்;
தான் விழையும் பொருள் எதுவும் தழுவி வரும்
போதினிலே
தேன் என்று மகிழ்வு அள்ளித்தரும்; முன்பு தான்
செய்த
தகைமிகு செயல் விளைவை நுகருபவர்
அனைவருக்கும்;
ஆனந்தம் அனைத்துயிர்க்கும், அருமுயற்சி இல்லாதே
அள்ளி அள்ளி வழங்குகின்ற அரியதொரு கோசம்
இது.

181. **த**டை அற்ற உறக்கத்தில் ஆனந்த மயக் கோசம்
தனைக் காட்டும் முழுதாகத் தான் விழையும்
பொருள் ஏதும்
கிடைக்கின்ற வகைக்கு ஏற்பக் கனவினிலும்,
விழிப்பினிலும்
குறைவாயும் நிறைவாயும் இயல்பாக
வெளித்தோன்றும்
தடைப்பட்டுப் பிறக்கின்ற தன்மையினால்,
பிரகிருதியின்
மாற்றம் என முன் செய்த நல்வினையில்
விளைவதனால்,
இடைப்பட்டுப் பிறகோசத்து உள்ளிருப்பதால், இந்த
ஆனந்தக் கோசமுமே ஆத்மாவாய் ஆகாது.

182. **நூ**ற்பொருளின் விளக்கத்தை நன்குணர்ந்து,
கோசங்கள்
ஐந்தினையும் அயல் எனவே அப்புறத்தில்
நீக்கியபின்
சுற்றினிலே அவை அனைத்தும் அறிகின்ற சாட்சி,
என
இருக்கும் பெரும் ஞானம் அதே ஆத்மா என்று
அறிந்திடுவாய்:

மாற்றம் இன்றி மருஇன்றி, முடிவில்லா ஆனந்தமாய்க்
கோசம் ஐந்துக்கு அப்பாலாய் முந்நிலையின் சாட்சி
என
ஆற்றலுடன் தனித்து ஒளிரும் மெய்ப் பொருளாம்
ஆத்மாவே,
நன்நிலை என்று அறிந்திடுவர், ஆய்ந்து உணர்ந்த
ஞானியர் தாம்.

183. **சீ**டன் கேள்வி :
**மு**ன்னர் அக் கோசம் ஐந்தும் - பொய் என
முழுமையாய்க் கடந்த பின்னே,
என்னில் நான் காண்பது எல்லாம் - உள்ளே
ஒன்றுமே இல்லாச் சூன்யம்

பின்எது உள்ளது ஐயா - ஆத்மப்
பொருள் உணர் அறிஞர் யாரும்
தன் இயல்பு என்று காண? - அந்தத்
தகைமையை விளக்கிச் சொல்வீர்.

184. குருமொழி :
சரிவரக் கேட்டனை, செறிபொருள் ஆய்ந்து
சிந்தித்து அறியும் நல்லறிவு உடையோய்!
திரிந்திடும் அகந்தை முதல் அவை இருப்பதும்,
பின் அவை இல்லா நிலைமை ஒன்று இருப்பதும்,
தெரிந்து அறிவதுவாம்; தனை அறிந்திடவே
தனக்கு அயலாய் ஒரு தன்மை இல்லாததாம்,
புரிந்து கொள், அவ்வரும் ஆத்மா தனையே,
பக்குவமாய் மிகப் பொலியும் நுண் அறிவினில்.

185. முன் அமை பொருள் எதும் முனைந்து அறிவதுவே
அப்பொருளினுக்கு ஒரு சாட்சியாம் - இங்கே
தன்னை அறிவதோர் சாட்சியிலா ஒன்றை
அறிந்து உணர்பொருள் என உரைப்பது எவ்விதம்?
தன்னைத் தானே அறிவதால், ஆத்மா
தனக்கு ஒரு சாட்சியாய்த் தானே ஆகும்;
என்னவே, ஆத்மா, ஈடிலாப் பரம்பொருள்
பிரம்மமே அன்றிப் பிறிது எதும் இல்லை.

186. நிலைகள் அவ்வுறக்கம், கனவொடு, விழிப்பினில்
தெளிவாய்த் தனை வெளிக்காட்டி இருப்பதும்,
பலவகைப் பட, மனத்துள் உணர் பொருளாய்
நான் எனத் தொடர்ந்திடும் நினைவினில் ஒளிர்வதும்,
அலைந்து உருமாறும் அகந்தையும், அறிவும்
ஆகிய அவற்றை அறிவதும், காண்பதும்,
நிலைத்த சச்சிதானந்தமும் ஆகிய
ஆத்மா நீ, என அறிவாய் நெஞ்சினில்.

187. குடம் நிறை நீரினில் கதிரவன் சாயலைக்
கண்டு, அதை ஞாயிறாய்க் கருதல் போல், மூடர்
படர்ந்திடும் ஞானச் சாயல் பட்டு ஒளிரும்,
அறிவு எனத் தனை எண்ணி, அலைவராம்
மருளில்;
குடமுடன், நீரும், கதிரவன் சாயலும்
ஆம் அவை ஒதுக்கி, அகண்ட நல் வானில்,
சுடர்ந்து அவை அனைத்தும் தனித்து நின்று
ஒளிர்க்கும்,
சூரியன் காண்பராம் சிறந்த நல் அறிஞர்.

188. உடலும், அறிவும், உள் ஒளிப் பிம்பமும்,
ஒரு புறத்து ஒதுக்கி, அறிவு அதன் மைய
இடத்தில், சாட்சியாய் இலங்கிடும் ஆத்மா
அகண்ட ஞானத்தை, அனைத்தின் மூலச்
சுடரை, உருவமும், அருவமும் கடந்து,
நிலைத்து, எங்கும் நின்று, நிறைந்து,
படர்ந்து ஊடுருவிப் பரவிய நுண்மையை,
புறமென, உள்ளெனப் பிரிவிலாத் தன்மையை,

189. தனக்கு அயல் இல்லாத் தன் இயல்பு என்றே,
ஆழ்ந்து அறிந்து உணரும் தன்மை கொள் எவரும்,
அனைத்துப் பாவமும், குறைகளும், துயரமும்,
மரணமும் நீங்கி, ஆனந்தக் கடலாய்த்
தனை அறிந்து ஒளிர்ந்தே, எவ்வகை அச்சமும்
நீங்குவர்; முக்தியை விழைந்திடும் எவர்க்கும்
தனைத் தெளிந்து அறியும் தன்மைக்கு அயலாய்ப்
பிறவியை நீங்கிட வழி எதும் இல்லை.

190. வெவ்வினைப் பிறப்புத் தளையினை நீங்கிடப்
பிரம்மனோடு ஐக்கியம் காண்பதே முறையாம்:
இவ்விதம் ஞானியர், தனக்கு அயல் இல்லாப்
பிரம்மானந்த முழுமையை எய்துவர்;

அவ்விதம் பிரம்மனை அறிந்தவர், மீண்டும்
பிறப்பினில் வீழும் பான்மை இல்லாமையால்,
எவ்விதமேனும் பிரம்மனோடு ஒன்றாய்
இயல்பினை உணர்தல் எவர்க்கும் நற்கடனாம்.

191. உண்மையாய், ஞானமாய், ஒரு முடிவு இலாததாய்,
மேன்மைகொள் தூய்மையாய், யாவையும்
கடந்ததாய்
விண்டிடா இன்பமாய்த், தன்னிலே நிலைப்பதாய்,
என்றுமே உள்ளதாய், இயல்பிலே ஆத்மனாய்க்
கொண்டிடும் புறம், அகப் பிரிவு இலாத்
தன்மையாய்,
வெல்வதாம், மிக உயர் ஒருமையாம் பிரம்மமே
திண்மை கொள் மெய்மையாம் தனக்கு அயலாய்
அது,
தாங்கிடும் பொருள் எதும் ஆங்கு இல்லாமையால்.

192. இத் தரத்தால் உயர் மெய்மையை உணரும்,
இயல்பினை எய்திடும் பொழுதினில் பிரம்மச்
சத்தியம் தனை அன்றிச் சார்வதோர் பொருள் எதும்
இல்லை; இவ்வுலகம் அனைத்துமே, நம்மைப்
பித்துறச் சூழ் அறியாமையால் இங்கே,
பலவகைத் தோன்றினும், உண்மையில் யாவும்,
சித்தம்சேர் சிந்தனைச் சிறைப்படாது இருக்கும்,
உத்தமப் பிரம்மமே அன்றி வேறு இல்லை.

193. பாண்டம், மண்கொளும் மாற்றமே, ஆயினும்
மண்ணினுக்கு அயல் அல்ல, மண்ணே ஆகும்;
காணுறும் பாண்ட வடிவது, கற்பனை
பொய்யாய்ப் படைத்த பெயரே ஆகும்,
யாண்டும், எவரும், பாண்டம் அஃதியல்பினில்,
மண்ணினுக்கு அயல் எனமுறை செயல் அரிதாம்!
மூண்ட மயக்கினில் காணும் அவ் வடிவினில்,
மண்ணே நிலையாய்த் திகழும் மெய் இயல்பாம்.

194. உரு இலா மெய்மையாம் பிரம்மனில் உதித்த
உலகங்கள் யாவும், உண்மையில் அந்த
ஒருமையே அன்றிப் பிறிது எதும் இல்லை;
உள் நிறைந்து அவற்றிலே ஒளிர்ந்து, பல் உருவம்
தரும் அதற்கு அயலாய்ப், பொருள் எதும் இல்லை;
அவ்விதம் இருப்பதாய்ச் சொல்லிடும் எவரும்,
மருளினை நீங்கிய மாண்பு அடையாமல்,
துயிலினில் உளரும் தன்மை கொண்டோரே.

195. 'இயல்பினில் பிரம்மமே வையம் இது' என
எழிலுற மொழிந்திடும் அதர்வ வேதம்;
நயம்பட அம்மொழி நாட்டிய படியே
உண்மையில் பிரம்மமே உலகம்; ஏனெனில்
மயங்கிடக் காணும் மாற்றங்கள் யாவும்
மற்று அவை தாங்கும் மூலத்தை நீங்கி,
இயங்குதல் இல்லை; இந்த மெய் தனையே,
ஏற்று உணர் பொழுதில் இத்திறம் விளங்கும்.

196. பின்னர், இவ்வுலகம் மெய்மையாய் இருந்தால்,
பரந்த அழிவில்லா ஆத்மனின் இயல்புக்கு
இன்னல் ஏற்படும்; ஏற்றமோடு ஆத்ம
இயல்பினை விளக்கும், உயர்ந்த நல் நூற்பொருள்
தன்னிலே பொய்மையாய் வீழ்ந்திடும்; இறைவன்
தானுமே பொய்மையைத் தயக்கம் இல்லாமல்,
சொன்னதாய் ஆகிடும்; இந்நிலை இனிது என,
ஏற்றித் தயங்குவர் உயர்ந்த நல் மாந்தர்.

197. பொருள்கள் யாவிலும் பொலியும் நுண்மையைப்
பழுது இல்லாமலே அறிந்த கண்ணனும்,
விரும்பி, ஏற்று, இக்கருத்தை ஓங்கவே,
விளக்கிச் சொன்ன வார்த்தை இவ்வகை,
'இருப்பது இல்லை நான், எந்த வேறு பொருள்
இயல்பிலும்; பின்னர், அப்பொருள்கள் ஏதுமே,
இருப்பது இல்லை என் இயல்பிலும்' இந்தக்
கருத்தும் பொய்மையாய்க் கண்ணன்

சொல்வனோ?

198. உறக்கத்தில் உலகம் ஒளிரா இயல்பால்,
மெய் அல்ல, கனவு எனப் பொய்மையே ஆகும்;
சிறந்து உயர் ஆத்மா தான் இன்றி, உலகம்
நிகழுவதில்லை, குணங்களைப் போன்றே,
திறம்படத் தனிப்படும் தன்மையும் பொய்யே;
தழுவிய பொய்ச்சுமை தாங்கிய மூலம்
துறந்திடப் பொய்மையும் நிலைப்பது உண்டோ?
மூலமே மற்றதாய் மயக்கத்தில் தோன்றும்.

199. சித்தம் கலங்கியோர், குழம்பியே காணும்
யாவும் பிரம்மமே; பிரம்மம் ஒன்றேயாம்.
முத்துச் சிப்பிதான் மோதிடும் ஒளியினில்
வெள்ளி போல் தோன்றினும் சிப்பியே ஆகும்;
நித்தமும் உலகு இதன் வடிவமாய், இங்கே
நிலைப்பதும் பிரம்மமே; நம் விழிக் காணச்
சுத்தமாம் பிரம்மனில் சார்ந்ததாய்த் தோன்றும்
யாவையும் வெறும் பெயர், அன்றி மெய் அல்ல.

200. எனவே, பலவகை வடிவமாய் இங்கே,
காண்பவை யாவையும், மிக உயர் மெய்மையாம்,
தனக்கோர் அயல் இலாத் தன்மையாம், தூய்மையாம்,
அறிவு அதன் செறிவாம், மரு இல்லாததாம்,
இனம் இலா அமைதியாம், எய்திடும் முதலும்,
முடிவும் இல்லாததாம், வினைகளைக் கடந்ததாம்,
அனைத்துக் காலமும் ஆனந்தம் ஆகவே
அமர்ந்து நிறைந்திடும் அருள்சேர் பான்மையாம்,

201. மருட்டிடும் மாயையால் பலப்படத் தோன்றும்,
இயல்புகள் கடந்ததாம் என்றுமே உள்ளதாம்,
திருத்தமாய் விளங்கிடும் இன்பமாம், தன்னில் ஓர்
பகுப்பு இல்லாததாம், அளவிடற்கு அரியதாம்,
உருவமாய், வெளிப்படா அருவமாய்த் திகழ்வதாம்,
பெயருடன், மாற்றம் ஒன்று இல்லாப் பான்மையாம்
தரும் தன் ஒளியில் நின்று, ஒளிர்வதாம் பிரம்மம்
தானே அன்றி, வேறு எதுவும் அல்ல.

202. அறிபவர், அறிபொருள் அறிவு எனும் தன்மைகள்
அற்றதாம் அழிவு இல்லாததாம், வேற்றுமை
செறிந்திடா ஒருமையாம், ஞான நல் உணர்வின்
இயல்பெனச் சிறப்பதாம், மொழி, மனம் கடந்ததாம்
எறிவதும், ஏற்பதும், எல்லையும் அற்றதாம்
பிறப்பு, இறப்பு அற்றதோர் முழுமையாம்,
பெரும்புகழ்
செறிவதாம், பரம்பொருள் மெய்மையாம்
பிரம்மனைத்
தன் இயல்பாகவே உணர்வர் நல் ஞானியர்.

203. 'அது நீயே' என ஆத்மனைப் பிரம்மனோடு
ஒருமையாய்ச் சாத்திரம் உயர்வாய்ச் சொல்கையில்,
அது, நீ என்னும் அவ் வார்த்தைகள் தாங்கும்
சார்புகள் அகற்றி, நேர்ப்பொருள் நீக்கிப்
பதுங்கிய உட்பொருள் பற்றுதல் வேண்டும்,
ஒளியினில் இயல்பினில், முரண் அவை -
மின்மினி
கதிர் எனச், சேவகன் அரசு எனக், கிணறுடன்
கடல் என, அணுவுடன் இமயம் எனவே.

204. மறைத்திடும் திரையினால் உணர்ந்திடும் முரண்
இது,
மெய் அல்ல, பரத்தினில் காரணமாய் நின்று
மறைத்திடும் மாயையும், ஜீவனில் மாயையின்
காரியமாம் பஞ்ச கோசமுமே, அந்த
மறைப்புக்களாம், அவை முற்றும் ஒழிந்திடப்
பரமும் இங்கில்லை, ஜீவனும் இல்லை,
முறை செயும் பதியும், கோசமும் செல்ல,
அரசனும் இல்லை, ஓர் அடிமையும் இல்லை.

205.'இப்பொழுது இதுவே ஆணை' எனச் சொல்லி,
ஏற்றம் கொள் மறைகளும், உறுதியாய்ப் பிரம்மனில்
துவிதமாகவே காணுறும் பன்மை
நன்றி ஒதுக்குதல்அறிந்து, சொல் மொழியினுக்கு

ஒப்பவே, நேர்கொள்ள உண்மையை உணர்ந்து,
மறைத்திடும் இவ்விரு திரைகளும் ஒழியவே
அப்புறப் படுத்துதல், பிரம்மனோடு ஆத்ம
ஐக்கியம் காணுதற்கு அமைந்த நல் முறையாம்.

206. இல்லை, இல்லை கற்பனையாலே
எழுந்திடும் உலகு எதும் மெய்நிலை இல்லை;
தொல்லையாய்க் கயிற்றில் காண் பாம்பினைப் போலவும்,
துயிலினில் இடைப்படும் கனவினைப் போலவும்,
வல்லமை சேரும் நற் சிந்தனை யாலே,
வழங்கிடும் உலகு இது அழிந்திட ஒழித்துச்
சொல்லும் அவ்வொருமையாம் தன்மையைச் சிந்தையில்
சீருறத் தெளிவாய் அறிந்திடல் வேண்டும்.

207. ஆகவே பரம்பொருள் ஜீவன் என்னும் அவ்
'இரு சொல்லும் கவனமாய் ஆய்ந்து அவற்றுள்ளே,
ஏகமாய் நிறையும் உட்பொருள் அறிந்தே,
ஒருமையை முழுமையாய் நிலைசெய்யக் கூடும்.
வாகு அமை நேர்ப் பொருள் முழுமையாய் ஏற்றலோ,
மற்று அதை முழுமையாய் மறுத்தலோ இன்றி,
பாகுபடுத்து அவ்விரு வகை இணைந்த
பான்மையில் ஒருமையைப் பற்றிட வேண்டும்.

208. 'இது அச் சதாசிவன்', எனச் சொல்லும் பொழுதினில்
எதிர்மறைக் கருத்தினை நீக்கி, அங்கு ஒற்றுமை
பொதுவினில் காணுதல் போல, நல்லறிஞர்,
இருபுறம் தோன்றும் முரண்களை நீக்கி,
அது நீயே என்னும் சொல்லில் மெய், ஞான
அர்ப்பணை யால் எழும் ஒருமையைக் காணுவர்
அது போல் பொருள் திகழ் ஆயிரம் நூல்களும்,
ஆத்மப் பிரம்ம ஐக்கியம் உரைப்பவே.

209. '**தூ**லம் அல்ல அது' எனச் சொல்லும்,
தொல்பொருள் முறைமையில் அயலவை ஒதுக்க,
நீலவான் என்னவே தன்னில் தான் தனித்த
நினைவினுக்கு எட்டா மெய்யினை அறிந்திடல்
ஏலும்; எனவே உன் இயல்பு எனவே
உணர்ந்திடும் கற்பனை உடல் இதை ஒதுக்கிக்
கோலம் கொள் தூய்மை சேர் சிந்தையில், அழிவிலா
ஞானமாம் பிரம்மனே நீ, எனக் காணுவாய்.

210. **ம**ண்ணிலே பிறந்தும் மாறு எனத் தோன்றும்.
மட்குடம் உண்மையில் மண்ணே போல,
உண்மையாம் பிரம்மனில் உதித்திடும் உலகும்,
உண்மையில் பிரம்மனே, பிரம்மம் ஒன்றேயாம்;
உண்மையில் பிரம்மம் ஒன்றே உள்ளதால்,
தன்னில் வாழ் மெய்மையாம், ஆத்மனாம்,
தூய்மையாம்,
தண்மைசேர் அமைதியாம் இரண்டு இலா
ஒருமையாம்,
பரம்பொருள் பிரம்மனே நீ, எனக் காணுவாய்.

211. **க**ண்ணுறும் காலம், இடம், பொருள், காண்பவன்,
காட்சிகள் யாவும் சேர் கனவு ஒரு பொய்மை
போல்,
வெண்ணமாய் விழிப்பினில் அறியும் இவ்வுலகும்,
வெறும் அறியாமையில் விளைந்ததே ஆகும்;
திண்மைசேர் உடல், புலன், பிராணன், மற்று
அகந்தை
யாவுமே பொய்மையாம்; ஆகையால்,
தூய்மையாம்
தண்மைசேர் அமைதியாம், இரண்டு இலா
ஒருமையாம்
பரம் பொருள் பிரம்மனேநீ எனக் காணுவாய்.

212. ஒன்றிலே தெரிந்திடும் வேறு எவ்வடிவும்,
உண்மையை ஆய்ந்தே உணர்ந்திடும் வேளையில்,
நின்ற அவ் வடித்தளம் ஒன்றே அன்றி,
நிலைவேறு ஒன்றாய் நிலைப்பது இல்லை
சென்றதோர் கனவினில் கண்ட, பல் உலகும்,
கனவுடன் மடிந்திடக் காணுதல் இன்றி,
நின்று அவை விழிப்பிலும், மனத்திலும் வேறாய்,
நிகழுதல் எவர்க்கும் நேர்வது இங்கு உண்டோ?

213. **ஜா**தி, மதம், குலம், குடும்பம் எனச் சொல்லும்,
சார்புகள் அற்றது வாம்;
சொல், பெயர், உருவமும், குணமும், தோற்றமும்
சேராது இருப்பதுவாம்;
ஈது எனச் சொல்லும் இடம், பொருள், காலம்
எல்லைகள் கடந்ததுவாம்
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

214. **ஈ**து எனச் சொல்லி அவ் வியல்பினை எவ்வொரு
மொழியும் இங்கு உரைப்பது இல்லை
ஏற்றம் கொள் தூயநல் ஞானக் கண்ணால் அன்றிக்
காட்சியும் கிடைப்பது இல்லை;
ஆதி இல்லாது ஒரு தூய உள் உணர்வு என
அமைந்து செறிந்ததுவாம்;
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

215. **அ**றுவகைத் துன்பமும் அண்டாது இருப்பதாம்,
யோகியர் நெஞ்சினிலே,
அனுதினம், நினைப்பதாம், புலன்களினால் என்றும்
அறிய ஒண்ணாததுவாம்;
அறிவது உணர்ந்திட, அமையாது இருப்பதாம்,
அழிவு இல்லாததுவாம்;
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

216. **ம**ருளினில் எழும், பல வகை செறி உலகினுக்கு
அடித்தளம் ஆனதுவாம்;
தனைத் தான் தாங்கிடும் தன்மையதாம், சேர்
பகுதிகள் அற்றது வாம்;
உருவமும், அருவமும், இல்லா இயல்பாம்,
இணை இல்லாததுவாம்;
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

217. **பி**றத்தல், வளர்த்தல், செழித்தல், நலிதல்,
நோதல், சாதல் என்னும்
நிலைகள் இல்லாததாம், அழிவு இல்லாததாம்,
நேர்ப்படும் உலகு இது கொள்
பிறத்தல், இருத்தல், அழிதல் எனும் நிலை
வகுத்து இங்கு இயக்குவதாம்;
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

218. **இ**லை எனும் தன்மை இல்லாததுவாம்,
வேற்றுமை கடந்ததுவாம்,
அலை இல்லாக் கடல் எனவே அமைந்து, ஓர்
அசைவு இல்லாததுவாம்,
கலைவு இல்லா முழு வடிவாம், யாதொரு
கட்டும் இல்லாததுவாம்
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

219. **பூ**ரணம் ஒன்று அது, ஆயினும் பலப்படும்
உலகு இதன் காரணமாம்,
அனைத்துக் காரணம் கடந்ததாம், தனக்கு ஒரு
காரணம் அற்றதுவாம்,
காரண, காரிய எல்லைக்கு அப்பாலாய்த்
தன்னில் தான் நிலைப்பதுவாம்;
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

220. **வே**ற்றுமை அற்றதாம், முடிவு இல்லாததாம்,
அழிவு இல்லாததுவாம்,
மாற்றமும், மாறாத் தன்மையும் இல்லா
மிக உயர் பரம் பொருளாம்,
ஆற்று ஒழுக்காய் எழும் தடையறு சுகமாம்
மரு இலா நிலைப் பொருளாம்;
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

221. **ஒ**ரு மெய் ஆயினும், மயக்கத்தினால் பல
வகையாய்த் தோன்றுவதாம்
உருப்பல காணினும், அணிகளில் பொன்னே
உட்பொருள் ஆவது போல்,
உரு , பெயர், குணமொடு, மாற்றங்கள் தாங்கினும்
மாறாது இருப்பதுவாம்
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

222. **அ**தற்கு அப்பால் ஒரு தன்மை இல்லாததாம்,
அனைத்திலும் உயர்ந்திருக்கும்,
மாயைக்கும் உயர்வாம், அனைத்து உயிர்க்குள் ஒளிர்
ஆத்ம ஒரு வடிவாம்,
சிதைவும், மாற்றமும், முடிவும் சேரா
மெய், அறிவு, ஆனந்தமாம்,
அவ்வுயர் பிரம்மமே நீ, எனச் சிந்தையில்
ஆழ்ந்து உணர்ந்து அறிவாய் நீ.

223. **ஏ**ற்றம் கொள் நூற்பொருள் இசைவுடன் ஏற்று
இயங்கிடும் அறிவினிலே
இவ்வுயர் மெய்மையைத் தான் நினைத்து ஆழ்ந்திடுப்
தியானத்தின் உதவியிலே,
தோற்றிடும் உண்மை, இதயத்தில் மிக, மிகத்
தெளிவுடன் கசடறவே,
குவித்திடும் உள்ளங்கையினில் தேக்கிக்
காண்கின்ற நீர் எனவே.

224. இவ்வுடல் தனிலே இருந்திடும் பொழுதே, தூயநல் ஞானத்தினை
அறியாமையுடன் அதன் விளைவு, அகற்றிப் படை, இடை அரசு எனவே,
செவ்விதில் அறிந்து, அவ் அறிவினில் திளைத்து, உன் ஆத்ம நிலை நிலைத்தே
சேர் உலகு அனைத்தும், பிரம்மன் என்று உணர்ந்தே
சேர்த்து அதிற் கலந்திடுவாய்.

225. அறிவு அதன் கருவறை உறைந்திடும் பிரம்மன் அரு, உரு அற்றது வாம்,
என்றும் இருந்திடும் மிக உயர் மெய்யாம், இரண்டு இலா ஒரு வடிவாம்,
அறிவு அதன் கருவறை உறையும அப் பிரம்ம நிலை தன்னில் பொருந்தியக்கே
பொருந்திய கருவறை, பொருந்திடும் துயரம், பொருந்துதல் இலை இனியே.

226. பிறப்பு, இறப்பின் காரணமாய், முன் இருந்தே, வலிவுடனே
தொடர்ந்து வரும், செய்பவன் நான், நுகர்பவன் நான் எனும் நினைவு
சிறப்புற மெய் அறிந்த பின்னும் சேர்ந்திருக்கும், சிந்தையிலே
உள்ளமர்ந்த ஆத்மநிலை, உறுதியுடன் பற்றி நிற்கத்
திறம்பட வே அந்நினைவை ஒழித்திடுதல் வேண்டும்,
தொடர்ந்து வரும் முன் நினைவு வாசனையை, முற்றாகத்
துறந்து, இங்கே இப்பொழுதே விடுபடுதல், முக்தி எனத்
தாம் உணர்ந்து கண்டவர்கள் தாம் உரைப்பர் தெளிவுடனே.

227. **த**னது இயல்பாம், ஆத்ம நிலை தலைப்பட்டே,
தனக்கு அயலாம்
மேனியுடன், புலன்கள், மற்றுப் பொருள்கள் தமை
நான் என்றும்
எனது என்றும் எண்ணுகின்ற அறியாமைப் பற்று
தன்னை
முன் ஒழிக்க வேண்டும் இங்கே, மெய்விழையும் நல்
அறிஞர்;
உனது இயல்பாய் உள் நிறையும் ஆத்மாவை,
அறிவினுக்கும்
அதன் மாற்றம் அனைத்துக்கும் சாட்சி, என
அறிந்தவனாய்
நினைவினிலே, நான்- அதுவே, என நிலைத்துச்
சூழ்ந்து இருக்கும்
பொய்மையுடன் பொருந்திநிற்கும் பான்மையினை
ஒழித்திடுவாய்.

228. **உ**லகு செல்லும் நெறியினிலே உலைதலும், மேனி
அதன்
உரு அதனை வளர்த்திருக்கும் உள்ளலதும், உணர்தல்
இன்றிப்
பலப்பலவாய்ப் படித்து அறியும் நூற்சுமையும், புறத்து
ஒதுக்கிப்
படர்ந்து உனது மெய் இயல்பை மறைத்திடும் பொய்
ஒழித்திடுவாய்
உலகு செல்லும் நெறியினிலே ஓடுதலால், நூல் பலவும்
உணர்ச்சி இன்றி மனனம் செய்யும் உறுதியினால்,
உடல் அழகை
நலம்பட்டே காத்திருக்கும் நினைவுகளால், மாந்தரவர்
நெஞ்சினிலே மெய் உணர்தல் நிகழ்வது இல்லை,
அறிந்திடுவாய்

229\. சம்சார இருட் சிறையைச் சார்ந்திருக்கும்
நிலைவெறுத்துச்
சந்தோஷமாம் அரிய விடுதலையை விழைபவர்க்கு,
அம்மூன்று விழைவுகளும், அவர் கால்கள்
தளைப்படுத்திப்
பின் இழுக்கும் சங்கிலிகள் என உரைப்பர் பொருள்
உணர்ந்தோர்;
அம்மூன்று தளைகளுமே அறுத்து ஒழிக்கும்
முயற்சியிலே,
அனுதினமும், அயற்சி இன்றி ஈடுபட்டு வெல்பவரே,
சம்சாரச் சிறை விடுத்துச் சுதந்திரமாய் வெளிவானில்,
சிறகடித்துப் பறப்பர், எனச் சொல்வர் அவர்
அனுபவத்தால்.

230\. நீரினிலே பலகாலம் ஊறுவதால், சந்தனத்தின்
நிர்மலமாம் மணம் மறைய நாற்றம் எழும்;
பொறுமையுடன்
சீர்பெறவே மாசு அகலத் தேய்த்திருக்கும்
பொழுதினிலே,
சிந்தையிலே சுகம் பிறக்கச் சந்தனத்தின் மணம் கமழும்;
சேர்ந்து அதுபோல, மனத்தின் உள்ளே அழுக்கு
எனவே சூழ்ந்திருக்கும்
ஆசைகளின் வாசனையால், பரமாத்ம நல் மணமும்,
நீர்க்கிடந்த சந்தனம் போல் மறைந்திருக்கும்;
ஞானத்தினால்
நலம் பெறவே தூய்மை பெய்யத் தன் இயல்பை
வெளிப்படுத்தும்

231\. அயற்பொருள்கள் மீது நிற்கும் அளவில்லா
ஆசைகளால்,
ஆத்ம நிலை விழைவை மனம் மறந்திருக்கும்;
ஆத்மாவின்
இயல்பினிலே, இடையின்றி மனம் நிலைக்கப்
புறப்பொருளில்
பற்று ஒழியும்; ஆத்மாவும் தன் ஒளியில் தான் திகழும்;

சுயநிலையாம் ஆத்ம நிலை, மனம் விழையும் அளவினிலே
புற உலகைப் பற்றுதலும் படிப்படியாய்க் குறைந்துவிடும்;
துயர் பொழியும் விழைவு அனைத்தும் ஒழிந்திடவே, முழுவடிவாய்த்
திகழ்ந்திடும் நல் ஆத்மநிலைதான் உணரும் நிலை பிறக்கும்.

232. **த**ன் ஆத்ம நிலையினிலே தான் நிலைப்பதாலே,
தவயோகி தான் சுமந்த மனம் நசிக்கும்; அங்கே
முன் நிறைந்த வாசனைகளும் ஒழியும், எனவே,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய இங்கே.

233. **தா**மஸத்தைப் பிற இரண்டும், இராஜஸத்தைச் சத்துவம்
தானும், அந்தச் சாத்விகத்தைத் தூய்மையுமே ஒழிக்கும்;
மாமணியாம் சாத்விகத்தை, முழு விழைவில் பற்றி,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

234. **எ**ஞ்சும் பழவினை முறையில் பிராரப்த கர்மம்,
மேனியினை நடத்தும் என நன்கு உணர்ந்தே, நெஞ்சில்
சஞ்சலம் இல்லாமல், மிக உறுதியுடன் அமைந்தே,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

235. **எ**ன்றும் இங்கே ஜீவன் அல்ல, நான் உயர்வாம் பிரம்மன்
எனும் நினைவில் நிலைத்து, அயலாம் அனைத்தையுமே ஒதுக்கி,
முன் நிறைந்த வாசனையின் மடுச் சுழலில் தோன்றி,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

236. **ப**டித்து அறிந்தும், ஆராய்ந்தும், பக்குவமாய் நெஞ்சில்
பார்த்து அறிந்தும், ஆத்மாவே, அனைத்திலும் உள் இயல்பாய்ப்
படிந்திருப்பதை உணர்ந்து, பொடி அளவும் இன்றி,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

237. **கொ**ள்வதுவும், கழிப்பதுவும், கருத்தில் கொள்ளா முனிவர்,
காரியங்கள் எவற்றிலும் கலப்பதில்லை, எனவே,
உள்ளம் அதில் பிரம்ம நிலை, உறுதியுடன் பற்றி,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

238. **நீ** அதுவே, என இங்கே நிகழ்த்தும் உரைப்படியே,
பிரம்ம, ஆத்ம ஒருமையினை மிக உணர்ந்தே, அந்தத்
தூய பெரும் ஒருமையிலே தொடர்ந்து இருக்கும் முகமாய்,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

239. **மே**னியினைத் தான் எனவே நினைக்கும் பெரும் மடமை,
வேரு னே கருகி விடும் வெற்றி பெறும் வரையில்,
ஊனம் இல்லாக் கவனமுட ன் சிந்தை ஒருப்படுத்தி
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

240. **க**னவு அளவே ஆனாலும், காட்சியிலே உலகும்,
காணுகின்ற ஜீவனுமாய்ப் பன்மை எழும் ஆயின்
முனைந்து ஒருமை அறியும் வரை, கற்றவனே! நீயும்,
மூடி உனை மறைத்திடும் பொய் முற்றொழிப்பாய் இங்கே.

241. **ம**றத்தல் தரும் துயிலினுக்கும், உலகின்
அலைக்கழிக்கும்
இயல்பினுக்கும், புலன் நுகரும் பொருட்களுக்கும்,
இங்கே
சிறிதும் இடம் கொடுக்காமல், சீராகத் தொடர்ந்து
சிந்தனையை ஆத்மாவில் சேர்த்து இருப்பாய்
என்றும்.

242. **ஈ**ன்றவரின் உடலினிலே இருந்தமலம் வழங்கத்,
தானும் மிகத் தசை, மலத்தைத் தாங்கி நிற்கும் உடலை,
நீண்ட, நெடுந் தொலைவினிலே நிறுத்தி, உயர் பிரம்ம
நிலை அடைந்தே, வாழ்வின் பயன் நிறைந்து
உணர்வாய் நீயே.

243. **கு**டத்து அடைந்த வெளி அதனைப் பெருவெளியிற்
கலக்கும்
கொள்கையிலே, உன் இயல்பைப் பரம்பொருளிற்
கலந்தே
தொடர்ந்து அவற்றின் ஒருமையினைத் தியானத்திலே
உணர்ந்து,
துணை அறு மெய்ச் சாந்தியிலே திளைத்திடுவாய்
முனியே.

244. **அ**மைந்து இருக்கும் அனைத்தினுக்கும்
அடிப்படையாய் நிற்கும்
அருள் ஒளியாம் பிரம்மம் அஃதே தான் ஆகி, இங்கே
அமைந்த பெரும் அண்டம் முதல் பிண்ட உடல்
வரையும்,
சகதியிற் குளம் எனவே மிக வெறுத்துத்
தவிர்ப்பாய்.

245. **இ**ங்கு, உடல் உடன் இழையும் ஒருமையினை நீக்கி,
மெய், ஞானம், ஆனந்தம், ஆத்மாவிற் சேர்த்து,
இலிங்க உடல் அதனையுமே புறத்து ஒதுக்கி, தனியாய்த்
தன்னில் திகழ் ஆத்மாவாய்த் தான் இருப்பாய்
என்றும்.

246. **எ**ப்பொருளில், ஆடியிலே காணும் வடிவாக,
எழுகின்றதோ உலகம் எனும் கற்பனைதான் இங்கே,
அப்பிரம்மம் நீ, இதனை அறிந்து உனது வாழ்வின்
அனைத்துப் பயன் உணர்ந்து கொண்ட
நிறைவினிலே நிலைப்பாய்.

247. **உ**ன் இயல்பாய், மெய், ஞானம், ஆனந்தமாய், ஏதும்
உருவம் இல்லா, இயக்கம் இல்லா, அயலும் இல்லா
ஒருமை
நன்னிலையை எய்தி, ஒரு நடிகரவர் வேடம்
களைவது போல், பொய் உடலைக் கருதும் எண்ணம்
களைவாய்.

248. **அ**னைத்து அமைந்த உலகமுமே மெய்மை அல்ல;
நொடியில்
நிலை பிறழும் அகம் அதுவும் மெய்மை அல்ல;
பின்னே,
'அனைத்து அறிவேன் நான்' எனவே சொல்லுகின்ற
மெய்மை
அழிந்து எழும் அவ்வகந்தையிடம் அமைதலும்
எவ்வாறோ?

249. **அ**ம் மொழியில், 'நான்' எனவே சொல்லுகின்ற
வார்த்தை
அகம் அதற்கும் சாட்சி, என்றும் உறக்கத்திலும்
நிலைக்கும்,
செம்மொழிநூல், 'பிறப்பு இல்லா நித்யம்',
எனச்சொல்லும்,
பரமாத்மா அரு உருவுக்கு அப்பால் ஓர் பொருளாம்.

250. **மா**ற்றம் கொளும் பொருள் அனைத்தின் மாற்றம்
அறிபொருள் தான்
மாற்றம் எதும் இல்லாமல் நிலைத்து இருத்தல்
முறையாம்;
தோற்றம் கொளும் புற உலகோடு, அக உலகின்
பொய்மை,
கனவு, உறக்கம், கற்பனை தான் அனுதினமும்
காட்டும்.

251. **பு**ற உடலும், அகம் எனச் சொல் நுண் உடலும்
பொருந்தும்
அவ்விழைவை, அறிவில் எழும் கற்பனை, என்று
ஒதுக்கிச்
சிறப்புற மெய், ஞானம் என முக்காலத்து இருக்கும்,
ஆத்மாவாம் உன் இயல்பை அறிந்து, அமைதி
கொள்வாய்.

252. **நா**ற்றம் கொளும் பிணம் எனச் சொல், உடல்
நெறியாம் குலமும்,
பரம்பரையும், பெயர், உருவும், வாழ்நெறியும், இங்கே
ஆற்றுபவன் எனும் வகை சேர் அக உடலின் நெறியும்
அகற்றி, மிகும் ஆனந்தமாய், அருள்வடிவாய் ஆவாய்.

253. **தி**றம்பட முன் சொன்ன, காரணத்தால் இந்த
அகந்தை, அறியாமை கொள்ளும் முதல் மாற்றம்,
பிறப்பு இறப்பில் சேர்த்தே இடர்ப்படுத்தும், பலவாம்
பிற தளைகள் தமக்கே, மூலம் இங்கே ஆகும்.

254. **அ**கந்தை எனும் அந்தப் பைசாசம் தன்னை,
அணைத்து இருக்கும் வரையில், புவியினிலே
எவர்க்கும்,
சுகம் மிகுத்தாம் முக்திச் சிறப்பு அதனைப் பேசும்,
சொல்லும் இங்கே இல்லை; நிச்சயமாய் இல்லை.

255. **வி**லங்கு எனச் சேர் அகந்தை, விலக்கிவிடும்
பொழுதில்
விண்மதி போல் இயல்பாய், விளக்க
ஒண்ணாப்பொருளாய்,
நலங்கொள் மிகும் தூய்மை, நிறையும் இன்ப முழுமை,
நல்லொளி மெய் வடிவம், நெஞ்சினிலே விளங்கும்.

256. **அ**றியாமை மயக்கம், அறிவு அதனைச் சூழ,
அகந்தை உருவாகும்; அது, நான், நான் என்றே,
செறிந்து உடலில் வாழும்; அகந்தை அதை ஒழிக்கச்
சேர் தளைகள் இல்லாப் பிரம்ம நிலை சேரும்.

257. **சி**த்தம் கலங்கச் சீறிடும் நாகமாய்ச்
சூழ்ந்திடும் அகந்தை தன் நலன் காக்க
முத்தலை யாய் எழும் முக் குணத்தாலே,
பிரம்மானந்தப் பெருநிதி காக்கும்;
அத்தலை மூன்றும், மெய்ந்நெறி நன்னூல்
அருளிய வழியில் அடைந்த, நல் ஞானக்
கத்தியினால் அறச் சிதைப்பவர் தமக்கே,
அந்நிதி வழங்கும் ஆனந்தம் கூடும்.

258. **ஒ**ரு துளி நஞ்சே உள் இருந்தாலும்,
உடல் நலன் செழித்தல் உண்டோ? அகந்தை
தரும் நிலை அதுவே - முக்தியை விழையும்
யோகியர் தமக்கே; அகந்தையில் தோன்றி,
விரும்பிய வழிச் செல்லும், மன நினைவலைகளை
வென்று, அகந்தையினை வேரறுத்து, உள்ளே
இருந்திடும் மெய்யினை ஏற்று அறிவதனால்,
'அது தான்,' எனும் அம் மெய்ந்நிலை அடைவர்.

259. **ம**ருளினில் பிறந்த மாற்றமாய், ஆத்ம
மாவிளக்கு ஒளிபட்டு ஒளிர்ந்தே, இயங்கும்
ஒருவன் நான் எனச் சொலும் உணர்வு இந்த அகந்தை
உடனே ஒழிப்பாய்; உன் நிலை நிலைத்தே
ஒருப்படல் தடுக்கும் இதனால் தான், நீ
பிறப்பு, இறப்பினிலே சிதைத்திடும் வாழ்க்கைப்
பெருங்கடல் வீழ்ந்தாய் - அனைத்து அறி சாட்சியாய்,
ஞானமாய், இன்பமாய், நீ இருந்தாலும்.

260 **அ**ழிவு இலா ஒருமையாய், அறிவு எனும் வடிவாய்,
அனைத்தின் உள் நிறைந்த பெரும் பேரின்பமாய்ப்
பழுதிலாப் புகழ்சேர் வடிவம் நீ; அகத்தினைச்
சேர்வதால் மட்டுமே சேர்ந்தனை பிறவியை;
கழுத்தினை இறுக்கும் கயிறு எனப் பகையாம்
அகந்தையை ஞானநல் வாளினால் அறுத்தே,
தழுவி, நல் இன்பமாம் தனிப்புகழ் சேர்க்கும்.
ஆத்ம நன்னாட்டுக்கு அரசனாய் வாழ்வாய்.

261. **அ**கந்தை வழிச் சென்று, அலைவதை நிறுத்தி,
அரிய பரம்பொருள் அறிவினில் உணர்ந்தே,
மிகுந்த விழைவுகள், மூலமோடு ஒழித்து,
மூழ்கி உன் ஆத்ம சுகத்தினில் திளைப்பாய்.
பகுத்துப் பலவகை பார்த்திடும் யாவும்
பிரம்மம் ஒன்றே, எனப்பொருள் உணர்ந்தே நீ,
திகழ்ந்து, பிரம்ம நல் அமைதியில் நிலைப்பாய்
நிலைத்த இயல்பினை நெஞ்சு உணர்ந்ததனால்.

262. **மு**யன்று இவ் வகந்தையை, மூலமோடு ஒழித்தும்,
மனதினில் ஒரு கணம் நினைத்திட, உயிர்த்தே
புயலினில் அலைந்து மழை தரும் முகிலாய்,
பலப்பல துயர்களைப் பொழிந்திடும் தொடர்ந்தே
துயர் இதை வென்ற பின் பொருள் வழி விழைவால்,
நொடிப் பொழுதேனும் இடம் தரல் வேண்டா
செயல் அதனாலே உயிர்பெறும் அகந்தை,
பேர் மழை நீர் உண்ட வாடிய பயிராய்.

263. **உ**டல் வழி நினைவினில் உலவிடுவோரே,
ஆசையில் பொருட்களை அணைப்பர் எந்நாளும்;
உடல்வழி நினைவினை உதறி, நல் மெய்ம்மை
நிலைப்பவர்க்கு அந்நிலை ஏது, எனவே,
படர்ந்து பொருள் வழி பாய்ந்திடும் நினைவே,
பிறப்பு, இறப்பு என்னும் பிணைப்பினைச் சேர்த்து,
இடர்மிகுத் தந்து, நம் இயல்பினை மறந்து,
பல என உலகினைப் பார்த்திடச் செய்யும்.

264. **வி**ழைவுகள் பெருகிடப் பெருகிடும் மூலம்;
விழைவுகள் கருகிடக் கருகிடும் மூலம்;
களைத்தல் இல்லாமல், இத்திறம் உணர்ந்தே,
விழைவுகள் வளர்த்திடல், தவிர்த்திடல் வேண்டும்.
கிளைத்திடும் வாசனை பெருகிடச் சுயநலச்
செயல்களும் பெருகும்; செயல்வழி, மீண்டும்
முளைத்திடும் வாசனை; முடிவு இலாத் தொடராய்ப்
பிறப்பு இறப்பும் மிகப் பற்றியே வளரும்.

265. **இ**ருட் சிறையாய் மிக வெருட்டும் சம்சாரம்,
இடரினில் பிணைக்கும் விலங்கினை உடைக்கும்
விருப்பம் கொள் எவரும், நினைவுடன், செயலும்
வேருடன் எரித்திட வேண்டும், ஏனெனில்
பொருள் வழி அலையும் நினைவுகள் உடனே,
பரிதவித்து இயக்கும் பல செயல் யாவும்
தரும் பரிசாய், நெஞ்சில் தளர்வின்றி விழைவுகள்
தழைத்திடச் செய்தே துயர் மிக வளர்க்கும்.

266. **அ**வ் விரண்டாலே அணைப்புறும் விழைவுகள்
அளிப்பது தான் பல பிறவியின் தொடர்ச்சிகள்
அவ்விதம் இருப்பினும், அனைத்திலும், என்றும்,
எங்கும் எந்நிலை, வகை யாவிலும் இருப்பது,
திவ்வியப் பிரம்மமே, பிரம்மம் ஒன்றே, எனத்
தெளிந்திட மூன்று அவை தாம் ஒழிந்திடுமே.
செவ்விய பிரம்மம் சேர்ந்திடும் விழைவு, அது
செறிந்திட மூன்று அவை சிதைந்து அழிந்திடுமே.

267. **அ**லைந்து திரிந்தே புரிந்திடும் செயல்கள்
அவை இல்லை என்றால், புலன் நுகர் பொருள்கள்
வலை இடை விழுகின்ற வீழ்ச்சியும் இல்லை;
வலை எனும் பொருள்களில் வீழ்தல் இல்லாத
நிலையினில் நின்றால், நினைவு கொள் விழைவின்
நெருக்கிடும் கூண்டில் வருந்தலும் இல்லை;
இலை அந்நிலை எனும் இயல்பே முக்தி-
இம்மையில் வீடு உறல் எனச் சொலப்படுமே.

268. **ந**ல் ஒளி செருகையை நாட்டிடும் அருணன்,
நேர்வரும் பொழுதே காரிருள் ஒழியும்;
நல் விழைவுகள் தாம் நெஞ்சினில் பெருகிட,
அகந்தையினால் எழும் அவ்விழைவு ஒழியும்;
வல் இருள் உடன் அதன் விளைவுகள் யாவும்
வாழ்கதிர் ஓங்கிடப் பாழ்படும்; அதுபோல்,
இல்லை இங்கே தளை, இடர்ப்படல் இல்லை;
இணை இல்லா இன்பம் எய்திடும் பொழுதே.

269. **வெ**ளியில் காண், புற உலகுடன் மனத்தில்
வகை பல வாய் எழும் உலகு அதும் ஒழியத்
தெளிந்த நற் சிந்தனை ஒரு முகமாகத்
திகழ் பேரின்பச் செறிவெனும், மெய்மை
ஒளிவழிச் சேர்ந்திட, உடன் தொடர்ந்தே, இன்னும்
எஞ்சிய கர்ம வினை அது இங்கே,
அளித்திடும் நெறிவழி காலம் சென்றிட
அமைந்த நெஞ்சினராய் இயங்குதல் வேண்டும்.

270. **பி**ரம்ம நிஷ்டையின் உறுதியினின்றும்,
பிறழ்தல் எவர்க்கும் பெரும் தவறாகும்;
பிரம்ம மைந்தன் சொன்னது இவ் வார்த்தை
'பிறழ்ச்சியே இங்குப் பெருந்துயர் மரணம்'
பரந்த தன் இயல் பற்றினில் பிறழ்தல்
போல் ஒரு துன்பம் ஞானியர்க்கு இல்லை
உரம் அதில் மயக்க விதை துளிர்த்து அகந்தை
மரத்தினில் தளைக்கிளை, துயர்க்கனி நல்கும்.

271. **உ**ற்ற அன்பினள் உறுதுணை எண்ணி,
உலைப்படும் காதலர் உள்ளமே போலக்,
கற்றமனிதரும், பொருள் வழி விழைவுக்
கானலுக்கு ஏங்கிக் கதறுதல் கண்டு,
குற்ற நெறியினிற் கொண்டு சென்றிடும்
அறிவு அதன் துணையால் அவர்தமை, மிகவே
சுற்றி வளைத்துச் சூழ்திரையாக
அக்கறை இன்மை தன் வசப்படுத்தும்.

272. **ப**டர்ந்திடும் பாசியை அகற்றிய மறுகணம்,
போர்த்தி, நீர்ப் பரப்பை மூடுதல் போல,
இடர்தரும் மாயையும், புறம் செலும் மனம் சேர்
இயல்பினர் தமை இருள் திரை இட்டு மறைக்கும்
தொடர்ந்த நன்னோக்கில் தளர்ந்து ஒரு கணமே,
மனம் அது புறம் செல்ல நேர்கையில், உயர்ந்த
இடத்தினின்றே கீழ் விழுந்த பந்து எனவே,
படிப்படியாய்ச் செல்லும் பாதாளம் வரை.

273. **பொ**ருள் வழி விழைவு எனும் மயக்கிடும் உலகினை
மனம் அது பொருந்திடப், பலப்பல பொருட்களில்
அரும்பிடும் குணங்களை ஆய்ந்து நன்றாகச்
சிந்தனை செய்திடும்; அவ்விதம் தொடரும்
திருந்திய சிந்தனை வளர்த்திடும் ஆசை,
நெருப்பு எனத் தகித்திட வருந்திடும் மனிதர்,
விரும்பிய பொருட்களைக் கைக்கொளும் பொருட்டே
வேட்கையில் அலைந்து செல்லும் வழியினில்
தொடர்வர்.

274. **எ**டுத்த நோக்கினில் இயங்காமல், நெறி
பிறழ்ந்திடும் எவரும், தன் இயல் மறந்தே,
தடுக்கி வீழ்வராம்; வீழ்ந்த பின்னாலே
மக்கி அழிவராம் மீண்டு எழல் அரிதாம்;
தடுத்து, வைத்தியர் ஒதுக்கிய பொருட்களை,
நோய்ப்படும் வேளையில் நீக்கிடல் போல
அடுக்கும் துயரினுக்கு அடித்தளமாம், பொருள்
விழைவினை முற்றாய் வெறுத்திட வேண்டும்.

275. **ப**குத்துப் பிரம்மப் பொருள் உணர்வோர்க்குப்
பொருந்திய நோக்கினில் பிறழ்தலுக்கு அயலாய்,
மிகுந்துத் துயர்தரும் மரணம் ஒன்று இல்லை;
முன் சொன்ன மொழியினில் நன்கு இது விளங்கும்;
தொகுத்த சிந்தையில் தொடர்ந்து இருப்போரே,
தேடும் பொருள் அது தடை இன்றிப் பெறுவர்;
வகுத்த நெறியினில் முழுக் கருத்துடனே,
அமைந்த நெஞ்சினில் அந்நிலை பெறுவாய்.

276. **இ**ம்மையில் ஒருமை காண்பவரே, உடல்
இறந்த பின்னாலும் ஒருமையில் திளைப்பர்;
இம்மியும் வேற்றுமை காண்பவர்க்கே பயம்;
இயம்பிடும் உயர்வாம் யஜூர் எனும் வேதம்
செம்மை கொள் அறிஞர், அழிவு இலாப் பிரம்மம்
அதன் இடை அணுவளவு அயற்பொருள் ஏதும்,
தாம்ஒரு தவறால் கண்டிட, அதுவே
துயர் மிகுப்பயம் கொடுத்து, அவர் தமை வருத்தும்.

277. **உ**யர்ந்த மெய்ப் பொருள் நூல் பலவும், ஆய் கருத்தும்
பொய் என ஓதுக்கும் பொருள் உலகு ஒன்றி,
இயங்கிடும் எவரும், ஏற்பிலாச் செயல் செயும்
கயவரேபோல், தொடர் துயரிலே வீழ்வர்;
மயக்கிடும் மருள் அற, மெய் வழிச் சிந்தனை
மூழ்குவர், பெறுவர் ஆத்மநல் நிலைதான்
அயல்தனைச் சேர்பவர் அழிவர்; நல் மனிதரும்
கயவரும் பெறும் நிலை காட்டும் இக்கோலம்.

278. **சி**றையினில் சேர்க்கும் பொய்மையை நீங்கி,
நான் அதுவே, என உயர்ந்த நன்னோக்கில்,
இறைவிழை துறவோர் இயங்கிடல் வேண்டும்;
பிரம்மனோடு ஒருமை கண்டு, அந்நிலையில்,
உறைந்திடும் பொழுதினில் பெருஞ்சுகம் பிறக்கும்;
உளத்தினைச் சூழும் அறியாமை எனும்
மறைப்பினிற் பிறந்த மிகும் பல துயரும்,
மாண்டு, அதனோடு அந்நிலை பெற ஒழியும்.

279. **தொ**டர்ந்திடும் சிந்தனை, புறப்பொருள் தமையே,
தேடி அலைந்திடத் துர் வாசனைதான்
இடர்தரும் பலனாய் மிக, மிக வளரும்;
இந்நிலை தனையே பகுத்து நன்கு அறிவோர்,
பார்ந்து புறம் செலும் சிந்தனை தன்னைப்
பக்குவமாய்த் திசை திருப்பித் தனக்குள்
கார்விடும் ஆத்ம ஜோதியை நாடி,
நிலைக்கும் நெறிதனில் நிலைத்திட வேண்டும்.

280. **வெ**ளி உலகு அதைச் சேர் விழைவினை நீங்கி,
விளங்கிடும் மனம் பெரும் அமைதியில் தெளியும்;
தெளிந்திடும் மனத்தினில், பரமாத்ம நிலைத்
தரிசனம் கிடைக்கும்; திகழும் நற் கதிராய்
ஒளிர்ந்திடும் அதை நன்கு உணர்ந்திடும் பொழுதில்,
உறுபிறப்பு இறப்புத் தளை உடைந்து ஒழியும்;
வெளி உலகு அதனை விடுத்தலே, முக்தி
வழியினில் முதற்படி என நன்கு அறிவாய்.

281. **க**ல்வியிற் கசடு அறத் தேர்ந்து, மெய்ப் பொருளைப்
பொய் இடைப்பிரித்து, நன்கு உணர்ந்தே பெரும்
நல்மொழி வேத நெறியினைப் பற்றி,
நிலைத்த பேராத்ம நிலையினை நாடிச்
செல்வதோர் மனத்தராய் வீட்டினை விழைவோர்,
பொய் உலகு இதனைப் பொருந்துதல், வீழ்ச்சி,
அல்லல் என்று அறிந்தும், அவ் விழை வினையே
அணைப்பது உண்டோ, அழும் சிறுகுழந்தை என?

282. **தே**கம் முதல், பொருள் பற்றிடுவோர்க்குத்
தளை அறும் வீட்டுச் சிறப்பு என்றும் இல்லை;
தேகம் முதல், பொருள் விழைவு என்றும் இல்லை,
தளை அற வீட்டில் தான் நிலைப்பவர்க்கே;
மோகத் துயிலிடை விழிப்பு என்றும் இல்லை,
முன், அவ் விழிப்பினை உறக்கமும் இல்லை;
ஆகும் அவ்விரு நிலைகளும் முரணாம்,
அவை ஒரு நாளும் இணைதல் இங்கு இல்லை.

283. **இ**யங்கும் பொருளிலும், இயங்காப் பொருளிலும்
இருந்திடும் அடித் தளமாய்,
உயர்ந்த நல் ஆத்மனை நெஞ்சினில் உணர்ந்தே,
உண்மையை மறைத்து இருக்கும்
மயக்கத் திரைகளைத் துறந்து நின்றே, நல்
முழுமை, ஓர் அழிவு இல்லா,
இயல்பு கொள் ஆத்ம நிலையினில் இருப்போர்,
எய்துவர் விடுதலையை

284. **எ**ல்லாம் ஆத்மா, எனும் உணர்வு அதனை
எய்திடும் பொழுதினிலே,
பொல்லாத் தளை அறும்; எல்லாம் ஆத்மா,
எனும் நிலைக்கு உயர்வு ஒன்றில்லை,
எல்லாம் ஆத்மா, எனும் நிலை எய்திட,
இடையறா உறுதியுடன்
நில்லா உலகை நீக்கி, நிலைப்பொருள்
பற்றுதல் இயைந்த முறை.

285. **உ**டல்வழிப் பற்றும் பொருள் வழி மனமும்,
உதவிடும் பல செயலும்,
தொடர்பவர் உலகினைத் துறப்பது எங்ஙனம்?
நிலை அதை விழைந்திடுவோர்
படர்நெறி, வினை, பொருள் துறந்தே, பற்றுடன்
பரம்பொருள் சிந்தனையில்,
இடர் இலா இன்பம் எய்திடும் விழைவுடன்,
இயங்குதல் தகுந்த நிலை.

286. **மெ**ய்ப் பொருள் கருத்தினைச் செவி வழிக்கேட்டு,
நெஞ்சில் கொண்டு அவ் வழியே,
செய்யாநல் அமைதியும், புலன் வழி அடக்கமும்,
சேர்ந்திடும் பிற இயல்பும்,
எய்திய துறவியர், எல்லாம் ஆத்மா,
எனும் நிலை காண்பதற்கே,
துய்யநன் நூல், 'உயர் சமாதி சேர்வதே
தனி வழி' என உரைக்கும்.

287. **செ**ழித்து வளர்ந்த பின், அகந்தையை விரைவாய்க்
கற்றநல் வல்லுநரும்,
அழித்தல் அரிதாம் - அமைந்த நிர் விகல்ப
சமாதி அமைதியிலே,
அழுந்தி, அதனிடை முழுகுதல் இன்றி;
அலைக்கழித்தே, நெஞ்சில்
எழும் பலவிழைவும், பலப்பல பிறப்பின்,
முன்வினை விளைவுகளே.

288. **வ**கை பல தோற்றிடும் சக்தி, உதவிடும்
திரையிடும் சக்தியுடன்,
அகம் வழி நினைவு எனும் சுழலினை மனிதரை
அலைக்கழித்தே குழப்பி,
அகந்தையின் குணங்களினால், அவர் சிந்தையை
அயல் இடைச் சேர்த்து விடும்;
மிகுந்த திரையிடும் சக்தியை முற்றாய்
மூலமோடு ஒழிக்காமல்,

289. உருத்தரும் சக்தியை ஒழித்திடல் அரிதாம்;
நீரிடைப் பால் எனவே,
இருந்து அறி ஆத்மனை, அறிந்திடும் பொருளிடை
பகுத்து அறிந்திட இயல்பாய்,
மருள்திரை ஒழியும், பெற்றிடும் வெற்றியும்
தடையின்றி நிலைத்து இருக்கும்;
பொருள் எனும் பொய்யிடை அலைதல் இல்லாமல்
மனம் ஒரு நிலைப்படவே.

290 நெறியினை நெஞ்சினில் நேர்ப்பட உணர்ந்திடப்
பிறந்திடும் பகுத்தறிவால்,
அறிந்திடும் பொருளிடை, அறியும் மெய் இயல்பினைத்
தெளிவுற அறிந்திடவே,
முறிந்திடும் மாயையின் மருள் எனும் விலங்கும்,
மோதிடும் துயரிடையே
எறிந்திடும் பிறப்பு, இறப்பும் இல்லை, இச்சிறை
தனைப்புறம் கண்டவர்க்கே.

291. ஜீவனே பிரம்மம், எனும் அவ்வொருமை
நிலை அறி ஞானம் என்னும்,
தீ வளர்ந்திடவே, நெருங்க ஒண்ணாத
அறியாமை என்னும்
பாழ்வனம் முற்றாய்க் கருகிடும்; அயல் ஒரு
பொருள் இலா ஒருமை தனை,
மேவிடும் எவர்க்கும், மறுபடி பிறந்திட
மூலமும் மீதும் உண்டோ?

292. மெய் இயல்பு அதனை, நன்கு உணர்ந்திடவே,
மூடிய திரை அகலும்;
பொய் அறிவும், அதன் போர்வையும், அதில் எழும்
துயரும் அங்கே மறையும்;
தொய்வு அறக் கயிற்றின், மெய் இயல்பு உணர்கையில்
இம் முந்நிலை விளங்கும்;
மெய் இதனால் முக்தி விழைபவர், பொருள்களின்
மெய் இயல்பு அறிதல் முறை.

293. **தீ**யிடைக் கிடக்கும் இரும்பது, தீ எனத்
தான் உருக் கொள்வது போல்,
ஆய்பவர் ஆய்பொருள் எனும் உரு அவற்றை,
அறிவு அது, பிரம்ம ஒளி
தோய்ந்திடவே பெறும்; அவ்விரு வடிவமும்
மயக்கம், கனவு, மனம்
வேய்ந்திடும் கற்பனை போல், முழுப் பொய்யாம்
விளங்க உணர்ந்திடுவாய்.

294. **அ**வ்வகை போன்றே, பிரகிருதி கொள்ளும்
அனைத்து உரு மாற்றமுமே,
கவ்விடும் அகந்தை முதல், உடல் வரையும்
காண்கின்ற பொருள் பலவும்,
எவ்வகையாலும் மெய் அல்ல ; ஏன் எனில்
இயல்பினில் அவை அனைத்தும்
ஒவ்வொரு கணமும் திரிவன, ஆனால்
ஆத்மா திரிவதில்லை.

295. **ப**குப்பு இலா ஞானம், பிற இலா ஒருமை,
என்றுமே நிலைத்து இருக்கும்;
ரிகும் அறிவுடன் அயல் அனைத்து அறிசாட்சி,
பருமையும், நுண்மையுமாம்
தகுதிகள் தாண்டிய ஒரு முழு வடிவம்
உள் நிறை பேரின்பமாய்
அகம் எனும் பொய்த்தையில் அடங்கிய உட்பொருள்
அதுவே பரமாத்மா.

296. **க**ற்ற நல் மனிதர், கவனமுடன், மெய்,
பொய் யினைப் பிரித்து அறிந்தே,
பெற்ற தன் நுண்ணறிவதனால், மெய்யினைத்
தெளிவுடன் அறிந்து, இங்கே
உற்றதன் ஆத்மா, முழுமை, நல் ஞானம்
என உளத்து உணர்ந்து, அதனால்
சுற்றிய தளை தமை நீங்கி, நல் அமைதியில்
சேர்ந்து நிலைத்து இருப்பார்.

297. **அ**யல் இலா ஆத்மா அதனை, நிர்விகல்ப
உயர் சமாதியினில் உணர்ந்திடும் பொழுதே,
துயர் தரும் இதய முடிச்சு, அறியாமை,
புயலிடைச் சருகாய்ப் போய் ஒழிந்திடுமே.

298. **நா**ன், நீ, அது, இது - அறிவு அதன் குறையால்,
தான் ஒரு முழுமை, பரமாத்மனிலே
தோன்றிடும் கற்பனை; சமாதி நிலையில்
மேன்மை கொள் பிரம்ம, மெய்ப்பட ஒழியும்.

299. **அ**மைதி, தன் அடக்கம், புறம் செலா நெஞ்சம்,
சுமை கொளும் பொறுமை, சமாதி விழைவுடன்,
சுமந்து, தன் இயல்பே, அனைத்து உள உலகில்
அமைந்த சர்வாத்மா, எனும் ஒரு நினைவில்

300. **நி**லைத்த நல் துறவோர், அறியாமை இருள்
தலைப்பட எழுந்த கற்பனை அனைத்தும்
இலைஎன ஒழித்தே, செயல்களும், மனத்தின்
அலைவும் இல் பிரம்ம ஆனந்தமாய் வாழ்வர்.

301. **உ**லகமும், புலன்களும், மனமும், தன் அகந்தையும்,
நிலைத்த சமாதியில், முழு அறிவு ஆத்மனில்
கலப்பவர், பிறவிக் கட்டு அறுத்திடுவர்,
இலை, அந்நிலை பிறர்க்கு, எவை பிற அறியினும்.

302. **சூ**ழும் பல் பிணைப்பால் இயல்பையும், பலவாய்க்
காணுவர், அவை அற, அழிவிலா இயல்பாய்
வாழுவர்; எனவே, சூழ் பிணைப்பு ஒழிய
விகல்பம் இல் சமாதியை விழைவர், நல் மாந்தர்.

303. **கொ**ட்டிடும் குளவியைச் சிந்தனை செய்யக்
கூடுறும் புழுவும் குளவி ஆவது போல்,
நிலையில் ஒரு முனைப்பாய் மெய் பற்றி ,
நிலைப்பவர் தாமே மெய் வடிவு எய்துவர்.

304. **செ**யல் பிற ஒதுக்கிச் சிந்தையில் குளவியைச்
சேர்ந்திடும் புழு, அவ்வுரு அடைவது போல்,
உயர் பரமாத்மனை, ஒரு முகமாத் தியானத்தில்
பற்றிடும் யோகியர் பெறுவர் அந்நிலையை.

305. **ப**ரமாத்ம நிலை, மிக நுண்ணிய மெய்,
புறம்செலும் மனத்தால் அறிவதற்கு அரிதாம்;
தூய் உயர் அறிவினர், மிக நுண் மனத்தால்,
சமாதி சேர்ந்திட, உணர்ந்திடும் நிலை அது.

306. **பு**டம் இட்ட பொழுதினில், பொருந்திய குறை அறச்
சுடர்விட்டு இயல்பாய், ஜொலித்திடும் பொன்போல்,
தொடர் சத்வ, இராஜஸத், தாமஸ மலங்கள்
விட, மனம் தியானத்தில் பிரம்மனாய் ஒளிரும்.

307. **தொ**டர் நெறி அதனால், தூய்மை கொண்டே பிரம்மம்
உடன், மனம் ஒருப்படச் சவிகல்ப நிலையினைக்
கடந்து, நிர்விகல்ப சமாதி தனில் நேர்ப்
பட, அயல் இல் பிரம்ம ஆனந்தம் விளங்கும்.

308. **அ**ந்தச் சமாதியில், பிணைத்திடும் ஆசை
அனைத்தும், செயல்கள் அனைத்தும் அழியும்,
முந்தி உள் புறம் எங்கணும் - என்றும், தன்
மெய் இயல்பே மிகப் பொலிவுடன் ஒளிரும்.

309. **கே**ள்வியில் சிந்தனை நூறு முறைகளும்,
அதனினும் தியானம் நூறு ஆயிரம் முறைகளும்,
நீள் பலன் தருவன; நிர்விகல்ப நிலை
நல்கிடும் பலனோ சொல்வதற்கு அரிதாம்.

310. **வி**கல்பம் இல்லாச் சமாதி தன்னில்
விளங்கிடும் தெளிவாய்ப் பிரம்ம தத்துவம்,
பிறகும் பிற உணர்வினை மனம் அலைவதனால்,
பிறநிலை எதனினும் அறிந்திடற்கு அரிதாம்.

311. **அ**மைதி கொள் மனத்துடன், புலன் நிலை நிறுத்தி,
உள் நிறை ஆத்மா தனில், மனம் கலக்கச்
சமைந்த அவ் ஒருமையை உணர்ந்து, வல் இருளாம்
ஆதியில்லா மருள் அதை அற ஒழிப்பாய்.

312. **யோ**கத்தின் முதற்படி பொருள் மிகு மௌனம்,
பொருளினை ஒதுக்கிடும் பான்மை, பலன் விழை
தாகம் இல்லாமை, செயல் அறத் தள்ளுதல்
தன்னில் வாழ் தனிமை, எனும் இவை ஆகும்.

313. **த**னிமையில் புலன்கள் அடங்கிடும், அவ்வழி
மனம் ஒடுங்கிடப் பின் அகந்தையும் அழியும்;
இனிமையாம் பிரம்மமும் இவ்வழி விளங்கும்;
எனவே தனிமையை விழைவர் நல் முனிவர்.

314. **வா**க்கினை மனத்தில், மனத்தினை அறிவினில்,
அறிவினை அதை அறி சாட்சியில் கலந்து,
நீக்கம் அற்று எங்கும் நிறை பரமாத்மனில்
அதனையும் கலந்து, நல் அமைதியில் திளைப்பாய்.

315. **தே**கம், பிராணன், புலன்கள், சேர் மனம்
அறிவு எனும் நிலைகளில் மனம் எதை நினைப்பினும்
யோகியும் அவ்வழி அவற்றையே சேர்ந்து,
அவை கொளும் துயரினை அடைவர் என்று
அறிவாய்.

316. **இ**வ்வகை அலைந்திடும் இ ர்தனை நீக்கிச்
செவ்விய சிந்தனை சேர்ந்திடும் முனிவர்
எவ்வகைப் பற்றையும், இயல்பினில் ஒதுக்கித்
திவ்விய சுகம் தனைத் தடை இன்றிப் பெறுவர்.

317. **வை**ராக்கியம் கொள் மனிதரே, மனத்திலும்
புறத்திலும் துறந்திடல் இயலும், ஏனெனில்
வைராக்கியம் கொள் மனிதரே, முக்தியை
விழைதலால் உள், வெளிப் பற்றினை வெறுப்பார்.

318. **வி**ரக்தி கொள் மனிதரே, பிரம்ம நிட்டையில்
சேர் ஊன்றியதால், பொருள்களை விழைந்து
புறத்தில் கொள் பற்றையும், நான் எனும் நினைவைக்
கருத்தில் கொள் பற்றையும், கை விட்டிடும்.

319. **ம**லை முகட்டிடை வளர் முக்தி எனும் கொடி
விழைந்திடும் மனிதப் பறவைக்குப் பற்றறு
நிலைமையும், பகுத்து அறி சிந்தையும் சிறகாம்,
இரண்டில் ஒன்று இழப்பினும், வருத்தம் என்று
அறிவாய்.

320. **நி**லைத்த வைராக்கியம் நெஞ்சில் கொள்வோர்க்கே
சமாதி எய்திடும்; தொடர்ந்து மெய் உணரும்
நிலைவரும்; அந்நிலை பெறவே பிணைப்பு அறும்;
விடுபடும் உயிரே நிலைச் சுகம் நுகரும்.

321. **அ**லைவு இலா நெஞ்சினர்க்கு, அரும் பற்று அறுத்தல்
அதனிலும் இன்பம் தருவது ஒன்று இல்லை;
நிலையிதன் உண்மை தெளிந்து உணர்ந்திடவே,
திகழும் நல் சுதந்தரம் புகழ் மிக விளங்கும்,
தலைவழி இது, முக்தி நிலை எனும் மங்கை
தனக்கு என உணர்ந்து, உன் நலம் விழைந்தேனும்
அலைவிலா மனத்தில், நிலைப்பொருள் ஆத்மா,
நினைவினை வளர்த்து, அகப் புறப்பற்று ஒழிப்பாய்.

322. **ந**ஞ்சு எனும் பொருள் வழி நகை கொளும் இயல்பை
மரணம் என்று ஒதுக்கி, இனம், குலப்பெருமை
நெஞ்சினில் ஒறுத்துச் செயல் தொலை நிறுத்திப்
பொய் எனும் மேனிப் பற்றினை விடுத்து,
நெஞ்சினில் ஆத்மச் சிந்தனை வளர்ப்பாய்,
நீயே மெய்மையில் சாட்சி, அலைந்திடும்
நெஞ்சினுக்கு அப்பால் நிலைத்த பரம் பொருள்
அயல் இலாப் பிரம்மம், அதனை நன்கு உணர்வாய்.

323. **ம**னத்தினில் பிரம்ம மெய், மிகப் பற்றிப்
புலன்களை இதத்தினில் நிறுத்தி, உன் மேனி
தனை நிலைப்படுத்தி, அதை வெளர்க்கின்ற
நினைவு அறப் பிரம்மனோடு ஆத்ம ஒருமை
இனங்கண்டு, அதனில் இணைந்து இருந்தே நீ,
பிரம்ம ஆனந்தம் பருகிடு என்றும்,
உனது இயல்பினிலே ஒரு தனை யின்றி;
அயல் பிற என் தரும்? அவை வெறும் சூன்யம்.

324. **து**யரங்கள் மிக நல்கும் தீமை ஆகும்,
அயல் தம்மைச் சேர்கின்ற நினைவு ஒதுக்கி,
இயல்பில் நல் ஆனந்தம் ஆகி, முக்தி
பயக்கின்ற ஆத்மாவைச் சிந்தனை செய்.

325. **த**ன் ஒளியில் நிலைத்து என்றும் ஒளிரும் சாட்சி,
அறிவுமயக் கோசம் இடை விளங்கும் ஆத்மா;
உன் இயல்பால் அயல் இடையில் அதனைக் கண்டு,
பிற நினைவைப் புறம் ஒதுக்கிச் சிந்தனை செய்.

326. **இ**டர் நல்கும் பிற எண்ணம் இடை வராமல்,
தொடர்கின்ற சிந்தனை தான் ஆத்மா தன்னில்,
படர்கின்ற நிலையினிலே, அதுவே உந்தன்
சுடர்கொள் மெய் இயல்பு என்றே தெளிந்து
கொள்வாய்.

327. **ஆ**த்ம நிலை தனில், உறுதி மிக நிலைத்து
அகந்தை முதல் பிற அனைத்தும் சேர் விழைவை,
நீத்து, அவற்றை உடைந்து விட்ட மட்குடம் போல்,
தொலைவினிலே ஒதுக்கி விட்டு வாழ்தல் வேண்டும்.

328. **தூ**ய்மை மிகும் மனம் அதனைச் சாட்சி, ஞானத்
தண் ஒளியாம் ஆத்மாவில் நிலை நிறுத்தி,
ஓய்வுபெற மெது மெதுவாய் அடங்கச் செய்து,
உன் இயல்பு முழுமை தனை உணர்ந்து கொள்வாய்.

329. **மே**னி, புலன், பிராணன், மனம், அகந்தை என்னும்
அறியாமைப் பிணைப்பு அனைத்தும் நீங்கி, உந்தன்
ஊனம் இல்லா, எல்லை இல்லா ஆத்மா தன்னை,
உருவம் இல்லா விண் வெளிபோல் உணர்ந்து
கொள்வாய்.

330. **கு**டம், பாண்டம், குதிர், ஊசி முனைகள் என்னும்
தடை அனைத்தும் நீங்கிட, விண்வெளிதான்
ஒன்றாய்ப்
பார்வது போல், அகந்தை முதல் குறைகள் யாவும்,
போய் ஒழியத் தூயப் பிரம்ம ஒருமை காண்பாய்.

**331. பி**ரம்மன் முதல் நுண் உயிர்கள் வரை அனைத்தும்
நிலை இல்லாப் பொய் வடிவாம்; எனவே, நின்ற
பரம்பொருளாம், அழிவு இல்லா உந்தன் ஆத்மா,
ஒரு பொருளே நிலைத்திருப்பது என்று உணர்வாய்.

**332. ஒ**ரு பொருளில், மருளாலே காணும் வேறு
உருவம் எதும், தெளிவினில் அப்பொருளே ஆகும்;
சுருள் கயிற்றில் காண் அரவம் கயிறே ஆகும்;
சூழ் உலகம் ஆத்ம ஸ்வரூபமாகும்.

**333. சு**ய வடிவே நான்முகனாம், நாராயணனாம்;
சுய வடிவே இந்திரனாம், சர்வேஸ்வரனாம்
சுயவடிவே அனைத்து உலகாம்; உண்மையில், உன்
சுயவடிவுக்கு அயலாய் ஒன்று இல்லை என்றும்.

**334. சு**யம் ஒன்றே உள் இருக்கும், வெளி இருக்கும்
சுயம் ஒன்றே முன் இருக்கும்; பின் இருக்கும்;
சுயம் ஒன்றே மேல் இருக்கும், கீழ் இருக்கும்;
சுயம் ஒன்றே எண் திசையும் சூழ்ந்து இருக்கும்.

**335. அ**லை, நுரையும், நீர்க் குமிழும், சுழலும் நீரே
ஆவதுபோல், மேனி முதல் அகந்தை ஈறாய்
நிலை அனைத்தும் பேருணர்வே, எங்கும், என்றும்,
தூய, ஒரு வடிவாம் மெய் அறிவே யாவும்.

**336. வா**க்குடனே மனம் அறியும் உலகம் யாவும்
பிரம்மம் ஒன்றே வேறு இல்லை என்றும்; எங்கும்
நீக்கம் அற நிறைந்து இருக்கும் பிரம்மம் ஒன்றே
பிரகிருதியின் எல்லையையும் கடந்தது ஆகும்:
நோக்கில் பல வடிவு அனையும் போதும் பாண்டம்,
மண் இயல்புக்கு அயலாக மாறல் உண்டோ?
தாக்குகின்ற மாயை, மது மயக்கத்தால் தான்,
மனிதர் எல்லாம் நான், நீ என்று இயம்புகின்றார்.

**337. ப**ல வகையாய் எழும் பொய்மைத் திரைகள் நீக்கிப்
பல இல்லா ஒருமை அதை விளக்கும் நோக்கில்,
பல வகையாய்ச் சுருதி சொல்லும், அங்கு இல்லை
வேறு ஒன்றும்; எனவேதான் விளக்கம் ஆக.

338. **வி**ண்வெளிபோல் நிர்மலமாய், முழுமையாக
விளிம்பு இன்றி, அசைவு இன்றி, மயக்கம் இன்றி,
கண்ணுறும் உள், புறம் இன்றி, அயலும் இன்றி
உள்ளது ஒரு பிரம்மம், வேறு அறிதற்கு உண்டோ?

339. **இ**ன்னும் இங்கே மேன்மேலும் என்ன சொல்ல?
ஜீவனுமே பிரம்மன் அன்றி வேறு அல்ல;
மன் உலகம் அனைத்தும் அந்தப் பிரம்மம் ஒன்றே;
'பிரம்மனுக்கு ஓர் அயல் இல்லை'; நூலும்
சொல்லும்;
தன் ஒருமை பிரம்மனுடன் கண்டு வாழும்,
தண் மதியோர் புற உலகின் உறவு ஒழித்து,
என்றும் அந்தப் பிரம்ம ஆனந்த ஞானமாக
இயல்பினிலே நிலைப்பதுவும் உண்மை ஆகும்.

340. **ம**லமயமாம் மேனியினில், அகந்தை நல்கும்
விழைவுகளை அற ஒழித்துக் காற்றைப் போல,
உலவுகின்ற நுண் உடலும் அஃதே போல,
ஒழித்திருப்பாய், பேரின்ப வடிவம் ஆகப்,
பலவகையாய் நூல்கள் எல்லாம் மிகப் புகழ்ந்து,
பண்பாடும் நிலைப் பொருளாய், உன்
இயல்பாய்,
நிலவுகின்ற பிரம்மம் அதை நெஞ்சு உணர்ந்து,
நீ அந்தப் பிரம்மமாய் நிலைத்து வாழ்வாய்.

341 **பி**ணவடிவாய் உலவுகின்ற மேனி தன்னைப்
போற்றுபவர், நெஞ்சினிலே கறை படிந்து
நவல் இணை பே இப்பது போல், பிறப்பு இறப்பில்
தனை வருத்தும், நோய் இணை பே வீழ்வர்; தூய
குணவடிவாய்ச் சிவமயமாய், அசைவு ஒன்று இல்லா,
ஒரு வடிவாய்த் தனை நினைக்கும் உயர்வு
கொள்வோர்,
பிணைப்பு இவற்றை நீங்கி, மிகும் பொலிவில்
வாழ்வர்;
பொருள் வழங்கும் நூலும் இதைத் தெளிவாய்ச்
சொல்லும்.

342. மேற்படிந்தே ஆத்மாவை மூடி, இங்கே
மறைத்திருக்கும் திரை அனைத்தும் நீக்கப் பின்னே
ஈற்றினிலே தான் மட்டும் இயக்கம் இன்றி,
அழிவு இன்றி ஒரு வடிவாம் பிரம்மம் நிற்கும்.

343. முழுவடிவாம் பிரம்மம் அந்தப் பரமாத்மாவில்,
மன எழுச்சி எல்லாமே மூழ்கும் போது,
எழும் வகைசேர் உலகு அங்கே இருப்பது இல்லை,
எல்லாமே வெறும் பேச்சு, வார்த்தை ஜாலம்.

344. ஒரு வடிவாய் நிலைத்து இருக்கும் உண்மை தன்னில்
உலகம் எனும் தோற்றம் வெறும் கற்பனை தான்,
உருவம் இல்லா, மாற்றம் இல்லா முழுமை தன்னில்
உருக்கொளுமோ வேற்றுமைகள் எந்த நாளும்?

345. பொருள் அறிவோன், பொருள், அங்கே அறிதல் என்னும்,
பிரிவுகளும் இல்லாத ஒருமை, என்றும்
உருவம் இல்லா, மாற்றம் இல்லா முழுமை தன்னில்,
உருக் கொளுமோ வேற்றுமைகள் எந்த நாளும்?

346. ஒரு வடிவாய்ப் பிரளயத்தின் பின்னே, எங்கும்
சலனம் இன்றி நிறைந்து இருக்கும் சமுத்திரம் போல்
உருவம் இல்லா, மாற்றம் இல்லா முழுமை தன்னில்
உருக்கொளுமோ வேற்றுமைகள் எந்த நாளும்?

347. இருள் மூலம் அழிய எழும் ஒளியைப் போல
மருள்மூலம் அழிய எழும் அயல் இல்லாத
ஒரு வடிவாம், பரம் பொருளாம், முழுமை தன்னில்,
உருக் கொளுமோ வேற்றுமைகள் எந்த நாளும்?

348. ஒரு வடிவாம் பரம் பொருளில் வேற்றுமைகள்
உரைப்பது இங்கே இயலுவதோ எந்த நாளும்?
பெரு மகிழ்வைத் தரும் துயிலில் வேற்றுமைகள்
பார்த்தது உண்டோ எவரேனும் எந்த நாளும்?

349. **இ**ருப்பது ஒரு முழுமை, பரப்பிரம்மம் தன்னில்,
இருந்தது இல்லை வையம் பொருள் அறியும்
முன்னும்;
சுருள் கயிற்றில் பாம்பு இல்லை எந்த நாளும்;
கானல் இடைத்துளி நீரும் காண்பது இல்லை.

350. **ப**ன்மை எனக் காண் உலகம் மாயை மட்டும்;
பரம்பொருள் தான் எந்நாளும் ஒன்றே ஆகும்;
நன்மொழி சேர் நூல்களுமே நவில்வது ஆகும்;
நலங்கொள்ளவே துயிலினிலும் அறிவது ஆகும்.

351. **ஒ**ன்றில் எழும் தோற்றம் எதும், தாங்கும் அந்த
ஒன்றேயாம் - கயிற்றில் காண் பாம்பைப் போல;
நன்று அறிவோர் காண்பர் இதைத் தெளிந்த
நெஞ்சில்,
காணுகின்ற பேதம் எல்லாம் மருளால் மட்டும்.

352. **இ**ருந்து அறியும் உலகு அனைத்தின் வேராய் நின்று
தாங்குவதோ மனம் மட்டும்; வேர் இல்லாமல்
தரு எதுவும் தனித்து என்றும் நிலைப்பது உண்டோ?
மனம் ஒழிய, உலகு அனைத்தும் அழிந்து போகும்;
பொருள் இதனை உணர்ந்து, உனது உள் நிறைந்து
பொலிகின்ற பரம் பொருளை நோக்கி, உள்ளம்
திருப்பி, ஒரு நோக்கில் அதைக் கலக்குமாறு
திசை திருப்பி மனம் கரையச் செய்வாய் நீயே.

353. **ச**லனமும், பிணைப்பும் தன்னில் இல்லாமல்
சார்வதோர் எல்லையின் விளிம்புள் நில்லாமல்,
பலவாப் பகுபாடும் பான்மை இல்லாமல்
பரவிய ஒரு பெரும் விண்வெளி போல,
நிலைத்த பேரறிவு, நலிவொணா இன்பம்,
நேர் இலாது, என்றும், ஓர் நலிவு இலாப்
பிரம்மனை,
நிலைத்த சமாதி நிர்விகல்பம் தனில்
நெஞ்சினில் முழுமையாய் உணர்வர் நல் அறிஞர்.

354. **கா**ரண காரிய எல்லை கடந்து,
கற்பனைக்கு எட்டா மெய்ப்பொருள் ஆகி,
பூரணமாய், இணைப் பொருத்தம் இல்லாமல்,
பொருள் விளக்கங்களில் பொருந்தி விடாமல்,
சாரம் என, மறை சாற்றுவது ஆகி,
அகந்தையின் வடிவாய் உள்நிறை பிரம்மனை,
நேர்ப்படச் சமாதி நிர்விகல்பம் தனில்,
நெஞ்சினில் முழுமையாய் உணர்வர் நல் அறிஞர்.

355. **அ**ழிவதும், சிதைவதும், அற்றதோர் நிலையாய்,
மறுப்பதற்கு இல்லாது இருக்கும் மெய்ப்
பொருளாய்,
எழும் அலை ஓய்ந்து, அமைந்து, இருந்திடும் கடலாய்,
ஏற்றிடும் பெயர் எதும் அற்றதோர் வடிவாய்,
தழுவிடும் குணங்களும், குறைகளும் இன்றிச்
சாந்தியாய் என்றுமே உள்ள அப் பிரம்மனை,
செழுமை சேர் சமாதி நிர்விகல்பம் தனில்,
நெஞ்சினில் முழுமையாய் உணர்வர் நல் அறிஞர்.

356. **ஆ**ழ்ந்த சமாதியில், மனம் அமைந்திடவே,
அறிந்திடுவாய் உனை, அழிவு இலாச் சிறப்புடன்
வாழ்வதோர் ஆத்ம வடிவு என நீயும்;
அறிகையில் முன்பல பிறவிகளாலே,
சூழ்ந்திடும் வாசனைக் காரிருள் சிறையின்
பிணைப்பினை விடுத்து - இங்கு அயர்வு
இல்லாமல்
வாழ்ந்திடும் மானிடப் பிறப்பினைப் பெற்ற
பயன்தனைப் பெற்றிடும் வெற்றி கொள்வாய் நீ.

357. **த**ன்னிலே குறை எனும் தடைகள் இல்லாமல்,
தனித்த சத், சித் ஆனந்தம் ஆகவே,
பின்னும் ஓர் பொருளிலா ஒருமை ஆகவே,
உன் இயல்பு ஆகவே, உன் உளே என்றும்

மின்னிடும் ஆத்மா தனை மிக நாடிச்
சிந்தையில் விரும்பிச் செய்க நல் தியானம்;
பின்னும் ஓர் பிறப்பும், இறப்புமே உன்னைப்
பொருந்துதல் இல்லை; இது மிக உண்மை.

358. **ப**ழ வினையாலே தொடர்ந்திடும் உடல் தான்
நிழல் என அவருடன் நடந்திடும் போதிலும்,
விழைந்து அதை ஞானியர் வளர்ப்பது இல்லை;
வெறுத்து ஒரு சவம் என ஒதுக்கிய பின்னே
அழிவு இலா ஞானம், இன்பமாம் ஆத்மனை
அறிந்த பின், ஜட, மல வடிவாம் மேனியை,
விழைதலை முழுதாய் விடுநீ - வாந்தியை
மறுபடி முகர்ந்தால் மனம் வரை குமட்டும்.

359. **நி**லைத்த மரு இலாப் பிரம்ம நெருப்பினில்,
வேருடன் இவற்றை எரித்த நல் ஞானியர்,
நிலைத்த, நித்திய, ஆனந்த ஞானமாம்
ஆத்ம வடிவாய் அமைவர் எந்நாளும்,
வலைஎனப் பிராரப்த இழையினிற் பின்னிய
மேனிதான், வாழினும், வீழினும் கருதார்
நிலைப்பொருள் உணர்ந்து - அதிற் திளைத்திடும் ஞானியர்
கழுத்திடு மாலையைக் கருதாப் பசுப்போல்.

360. **வ**ரம்பு இலா இன்பமாம் ஆத்மனே தனது
இயல்பு என உணர்பவர், எப்பொருட்டு, எதற்காய்
உரம்பட மேனியை வளர்த்திடக் கூடும்?
ஜீவன் முக்தி நிலை பெறும் யோகியர்,
வரம் எனப் பெறுகின்ற வளம் அது இதுவே -
உள்ளொடு புறமும், மனத்தொடு உலகிலும்,
தரம் உயர்வாக நிலைத்த பேரின்பம்,
தன்னிலே திளைக்கும் தகைமை அஃதேயாம்.

361. **வி**ருப்பு இலாச் சமநிலை வழங்கிடும் அறிவினை;
அறிவினில் புலன் வழி விழைவுகள் அடங்கும்;
தரும் பரிசாய் இது தன் மய ஆனந்தம்;
அதனிடைப் பிறக்கும் அருள் நிலைச் சாந்தி;
நெருங்கிப் பின் தொடரும் நிலைகள் இல்லாமல்
முன் நிலை எதுவும் தன் பயன் இழக்கும்;
பொருள் உலகு ஒழிதலும், பெரும் மனத் திருப்தியும்
இணை இலா இன்பமும் இயல்பினில்
தொடர்வன.

362. **உ**லகு அதன் துயரால் அலைப்பு உறா நிலையைப்
பெறுவதே ஞானம் தரும் பயன் ஆகும்;
கலங்கிய சிந்தையில் நிகழ்த்திய தவற்றைத்
தெளிந்த பின் எவரும் தொடர்தலும் உண்டோ?
நிலை இல்லாப் பொருள்களை நீங்குதல் அறிவாம்;
நெருங்குதல் மடமை; கானல்நீர் அறிந்தவர்,
அலைந்து அதைத் தொடர்பவர் இலை இது
விளங்கும்.
மெய் உணர்பவர் பெறும் பயன் வேறு எதுவாம்?

363. **அ**றியாமை அதன் பிணைப்புக்கள் நெஞ்சில்
அறுபடப் புலன் விழைவு ஒதுக்கிடும் மனிதர்,
வெறிதரும் சுயநலச் செயலினைக் கலக்கும்
இயல்பு அதும் உளதோ? புலன் வழிப் பொருட்கள்
குறித்து எழும் ஆசைகள் அறும் நிலை விரக்தியின்
உயர்நிலை; நான் எனும் உணர்வு அற ஒழிதல்
நிறைவு கொள் அறிவாம்; ஒடுங்கிய நினைவுகள்
மீண்டு எழா நிலை மிகத் தன்னிலே நிலைத்தல்.

364. **நி**னைவு என்றும் பிரம்மநிலை நிலைத்து
இருப்பதாலே
புற உலகை மெய் எனவே போற்றும் உணர்வு
இன்றித்
தனை வேண்டிப் பிறர் நல்கும் பொருள்கள்
தமைக்குழந்தை
போல், உறக்கம் கலையாதார் போல், நுகர்வார் ஆகிக்

கனவு எனவே உலகு இதனைக் கண்டு, அதனைச் சிலநாள்
கணப்பொழுதே உணர்பவராய் வாழ்பவர்கள் தம்மை,
இனம் காணல் அரிது ஆகும் - நல் அருளால், நல்ல
பலன் நுகர்ந்து, புவிபோற்ற வாழ்பவர்கள் தம்மை.

365. **மு**ழுமை பெறப், பிரம்மநிலை நிலைத்து இருப்பதாலே,
நிலைத்த இன்பம் நுகர்பவராய், மாற்றமுடன் செயலாம்
பழுது அறவே, பேருணர்வில் தொடர்ந்திருக்கும் துறவோர்
ஸ்திதப் பிரக்ஞர் எனும் நிலையைப் பெற்றவராம் இங்கே.

366. **பி**ணைப்பு அனைத்தும், பன்மையுமே அற்றதுவாய்த் தூய
ஞானம் மட்டும் குறிக்கோளாய்ப் பிரம்மனுடன் ஆத்ம
இணைப்பை மட்டும் நினைக்கும் நிலை பேருணர்வாம் இங்கே;
நிலை அதனில் தொடர்ந்து இருப்போர் ஸ்திதப் பிரக்ஞர் ஆவார்.

367. **எ**ல்லை இல்லாப் பேரின்பத்து இருப்பவராய் என்றும்,
ஸ்திதப் பிரக்ஞ நிலையினிலே நிலைத்து இருப்பவராகிப்
பல்வகையாம் உலகுதனை மறந்தவராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

368. **வி**ழிப்பு நிலைக் குறைகள் இல்லா விழிப்பில் நிலையாகி,
பிரம்மனுடன் ஒருமை கொள்ளும் மனத்தினராய் என்றும்
விழைதல் இல்லா மெய் அறிவில் விளங்கி இங்கே வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

369. **உ**லகு வழிச் சஞ்சலங்கள் ஒழித்தவராய்க் கூடும்
உறுப்பு அமைந்த உடல் பெறினும், உறுப்புக்கள் இல்லாமல்
அலைக்கழிப்பைப் புறம் கண்ட மனத்தினராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

370. **நி**ழல் எனவே தொடர்ந்து இருக்கும் இவ்வுடலில் வாழ்ந்தும்,
நான் என்றும், எனது என்றும் நினைவினிலே தோன்றி,
எழும் அகந்தை உணர்வு அதனை வென்றவராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

371. **மு**ன் கடந்த நினைவுகளைப் போற்றுதலும், இங்கே
பின்வரும் நாள் கற்பனைகள் எதிர்பார்ப்பதும் இன்றி,
இன்றிருக்கும் நிலை குறித்தும் கவலை இன்றி வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

372. **ந**ன்மையுடன், தீமை, தனைச் சூழ்ந்திருக்கும் போதும்,
ஒன்றுடனே மற்றது தான் வேறுபடும் போதும்,
பன்மையிடை ஒருமை தனைப் பார்ப்பவராய் வாழ்தல்
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

373. **இ**ன்பமுடன் துன்பமுமே எதிர் வரினும், இங்கே
இரு நிலையும் தனை வருத்தும், நிலை அதுதான் இன்றி,
ஒன்று எனவே சமநிலையில் உணர்பவராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

374. **வெ**ள்ளம் எனப் பெருகி வரும் பிரம்ம ரசத்து இன்பம்,
பருகி அதில் மூழ்கி, மிகத் திளைத்து இருக்கும் துறவோர்
உள், புறமாம் உணர்வு அனைத்தும் ஒழித்தவராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

375. **மே**னியின் புலன் வழியும், மிகுந்த செயல் வழியும்,
நான், எனதாம் உணர்வு ஒழித்து, நேரும் நிலை எண்ணித்
தான் அலைதல் இல்லாத தகைமையிலே வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

376. நன்மொழி நூல் சொலும் வழியில், ஆத்மாவே பிரம்மம்
எனும் அறிவை உணர்ந்தவராய்ப், பிறப்பு, இறப்பின் துன்பம்
சென்று அடையும் தளை விடுத்துச் சிறப்புறவே வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

377. உடலுடனே புலன் இவற்றை 'நான்' எனச்சொல் உணர்வும்,
அயற் பொருள்கள் அனைத்தையுமே அது எனச் சொல் உணர்வும்,
கடந்தது ஒரு பெரு நிலையில் நிலைத்தவராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

378. பேருணர்வைப் பெற்றதனால், பிரம்மனுடன் தானும்,
சூழ் உலகும் வேறு எனவே காணும் நிலை இல்லா
ஒருணர்வில் உறுதியுடன் நிலைத்தவராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

379. தன் உடலைச் சான்றோர்கள் போற்றிடினும், தீய
தன்மை கொண்டோர் துயர் மிகவே வாட்டிடினும் இரண்டும்,
ஒன்று எனவே சமநிலையில் உணர்பவராய் வாழ்தல்,
பிறப்பு இதனில் முக்தி பெற்றார் கொள்ளும் நிலை ஆகும்.

380. தனைச் சேரும் நதிகளினால் மாற்றமுறாக்
கடல்போல்,
பிறர் வழங்கும் பொருள் பெறினும், பேதம்
இல்லா நிலையில்
நினைவினிலே நிலைத்தது ஒரு மெய்யுடனே, ஒன்றி
நிற்பவர்கள் நிச்சயமாய் முக்தி பெற்றவர் ஆவர்.

381. முன்பு இருந்த நிலையினைப் போல், பொருள்
வழியே அலையும்,
பான்மை இல்லை பிரம்ம நிலை பெற்றவர்க்கு
எந்நாளும்,
இன்றும் அந்த நிலையிருந்தால், புறம் அலையும்
புலன்கள்
கொண்ட வராம், பிரம்மநிலை பெற்றவர்கள்
ஆகார்.

382. முன் நினைவு வாசனையின் வேகத்தினால் இன்னும்
புலன் விழைவு பெற்று இருப்பர் என்று உரைத்தால்
இல்லை,
தன் ஒருமை பிரம்மனுடன் உணர்கையிலே, அனைத்து
வாசனையும் மிக நலிந்து நசித்துவிடும் இங்கே.

383. காமுகரும் தன் அருகில் தாய் இருக்கும் போது,
கீழ்த் தரமாய் நடப்பதனைத் தவிர்த்திடுவர்;
அதுபோல்,
தாம் முழுமைப் பிரம்மநிலைப் பேரின்பம்
காண்போர்,
தவறியுமே உலகு இயலைத் தழுவுதல் இங்கு
இல்லை.

384. நிலைத்த உயர் தியானத்து நெறிப்படுவோர் கூடப்,
புறநிலையை அறிவது உண்டு, பிராரப்தம் தந்த
நிலை இது எனச் சொல்லும் உயர் நூலும்; இதை
நேரில்
நிகழ்கின்ற விளைவுகளும் நாம் உணரக் காட்டும்.

385. **ம**கிழ்வுடனே துயர் அறியும் நிலை இருக்கும் வரையில்,
பிராரப்தம் தொடர்வதனைப் பார்த்திடலாம் இங்கே;
முகிழ்க்கும் ஒரு விளைவு எதுவும் செயலினையே தொடரும்
செயல் இன்றி விளைவு எதுவும் தனித்து அமைதல் இல்லை.

386. '**நா**ன் பிரம்மம்' எனும் நிலையை உணர்ந்து அறியும்போது
பல நூறு கோடி யுகப் பிறவிகளில் குவித்துத்
தான் அடையும் செயல் அனைத்தும் பூரணமாய் ஒழியும்,
கனவு இயக்கம் அனைத்தும் ஒன்றாய் விழிப்பில் அழிவது போல்.

387. **க**னவினிலே கற்பனையாய்த்தான் நிகழ்த்தும், நல்ல
செயல்களுடன் கொடுமைகளும் கனவு அறிவோர் தம்மைக்
கனவு, உறக்கம் கலைந்த பின்னே சொர்க்கத்திலோ, அன்றி
நரகத்திலோ சேர்த்திடுதல் நிகழ்வது உண்டோ என்றும்?

388. **ஒ**ன்றிலுமே ஈடுபடாது, ஒரு பிணைப்பும் இன்றி
நின்று இருக்கும் ஆத்மநிலை நன்கு உணர்ந்த பின்னே,
பின்பு இனிமேல் வாழ்வினிலே வரும் செயல்கள் எண்ணி.
ஒரு பொழுதும் அலைவதில்லை உண்மை உணர் மாந்தர்

389. **பெ**ரு வெளிதான் தனில் இருக்கும் குடம் நிறைந்த மதுவின்
மணத்தால் ஓர் மாற்றமுமே கொள்வதில்லை; அதுபோல்
ஒரு வடிவாம் ஆத்மாவும், தனில் நிலைக்கும் பிணைப்புத்
தளைகள் கொளும் நெறிகள் எதும், தான் அடைதல் இல்லை.

390. **ஞா**ன நிலை விடியும் முன்னே, இவ்வுடலை நல்கி
நடந்த செயல் பிராரப்தம்; ஞானம் அதனாலும்
தான் அழிதல் இல்லை, அதன் பலன்கள் விளையாமல்—
நாண் விடுத்த கணை அது தன் நோக்கு அடைதல் போல.

391. **பு**லி எனவே கருதி ஒரு கணை விடுத்த பின்னே,
புலி அல்ல, பசு எனவே உணர்வதனால், முன்னே
செலுத்தி விட்ட கணை வழியில் நின்றிடுதல் இல்லை,
தன் குறியைத் தான் வலியாய்த் துளைத்த பின்னே ஓயும்.

392. **மெ**ய் அறிந்தோர் தம் இருந்தும், பிராரப்த வினைதான்
நின்று இருக்கும், தன் பலனைத் தந்த பின்னே அழியும்;
மெய் அறிவாம் நெருப்பினிலே முன் குவித்த வினையும்,
பின்னர் வரும் வினை அதுவும் பூரணமாய்க் கருகும்;

மெய் அறிந்து, பிரம்மநிலை ஒன்றி அதில் வாழ்வோர்,
தாம் அந்த மூன்று நிலை தாம் வழங்கும் விளைவை,
எய்துவதே இல்லை; இங்கே உண்மையிலே அவரே,
குணங்கள் எல்லாம் கடந்து நிற்கும் பிரம்ம வடிவு ஆவர்.

393. **த**னக்கு அயல் ஒன்று இல்லாமல், தடைகள் எதும் இன்றி,
தனித்து இருக்கும் ஒரு வடிவாம் பிரம்மனுடன், தன்னை
இனம் கண்டு அவ்வொருமையிலே மூழ்கிவிடும் முனிவர்
தமக்கும், இங்கே பிராரப்தம் இருக்கின்றதாய்ச் சொல்லிப்
புனைந்து உரைக்கும் வார்த்தையிலே பொருள் எதுவும் இல்லை,
உறக்கம் கலைந்து எழுந்து விட்ட மனிதர்களில் யாரும்,
கனவு உலகப் பொருட்களுடன் தொடர்பு கொண்டே இன்னும்,
கலங்குவதில் பொருள் உண்டோ? எந்நாளும் இல்லை.

394. **உ**றக்கம் கலைந்து எழுந்தவர்கள், நான் எனது என்று எண்ணிக்
கனவு உலகை நினைப்பதுவும், அவ்வுலகின் காட்சிச்
சிறப்பு அதனைப் போற்றுதலும் இல்லை; அவர் தனது
இயல்பினிலே, தெளிந்தவராய் விழித்து இருப்பார் இங்கே.

395. **க**னவு உலகக் காட்சியினை, மெய் எனச் சொல் விழைவும்,
அவ்வுலகைப் பற்றி நிற்கும் அக்கறையும் இன்றித்
தனது இயல்பில் நிலைத்திருப்பர்; இல்லை அவ்வாறு என்றால்
உறக்கம் இன்னும் கலையவில்லை - உறுதி இது ஆகும்.

396. **அ**து போலப், பிரம்ம நிலை மூழ்கி ஒன்றாய் இருப்போர்,
பிற எதையும் அறிவதில்லை; கனவு உலகக் காட்சி,
எது என்ற நினைவு மட்டும் இருப்பது போல், அவர்க்கும்
உண்பது போல் உலகு இயக்கம் நினைவினிலே நிலைக்கும்.

397. **தே**கம் இதைப் பிராரப்தம் வழங்கியதால் இங்கே,
தேகத்திற்குப் பிராரப்தம் உண்டு எனலாம், வினையின்
வேகத்தினால் தான் பிறவா ஆத்மாவுக்கு என்றும்
வினைப் பயனாம் பிராரப்தம் உரைத்தல் முறை இல்லை.

398. **பெ**ருமொழியே நூல்கள் எல்லாம் ஆத்மாவை, என்றும்
பிறப்பு இல்லாச் சிதைவு இல்லா, நித்யம் எனச் சொல்லும்
ஒரு வழியாய் அதில் நிலைத்தே வாழ்பவர்கள் தமக்கும்,
பிராரப்தம் உண்டு என்பது எவ்வாறு பொருந்தும்?

399. **மே**னியினைத் தான் எனவே நினைக்கும் வரை உலகில்,
பிராரப்தம் பலன்நல்கும்; மெய் உணர்ந்தோர் என்றும்,
மேனியுடன் ஒருப் படுதல் இல்லை இது தெளிவாம்,
ஆதலினால் அவர் நிலையில் பிராரப்தம் இல்லை.

400. **தே**கத்திற்கும் பிராரப்தம் உரைத்தல் தவறாகும்.
பொய்க் காட்சி வடிவம் அது எவ்வாறாய் இருப்பது
ஆகும்? அது பிறப்பது உண்டோ? இறப்பது தான் உண்டோ?
இல்லாத பொருளுக்குப் பிராரப்தம் எங்கே?

401. **அ**றியாமை வேருடனே ஞானம் வர ஒழிந்தால்,
எப்படிப் பின் உடல் வாழும்? எனக் குழம்பும் மூடர்
குறித்து, அவரும் ஏற்பதற்கே பிராரப்தம் தன்னை,
இரு நிலையும் சீர்தூக்கிச் சொல்லும் உயர் நூலும்.

402. **மே**னியினை மெய் எனவே, மெய் உணர்ந்தோர் இடத்தும்,
நிறுவுதற்குப் பிராரப்தம் சொல்லவில்லை நூல்கள்;
ஏன்எனில் எந்நாளும் அவை, பரம் பொருள் தான் ஒன்றே
எனும் கருத்தை வலியுறுத்தும் இயல்பினவாம் இங்கே.

403. **ஆ**தியுடன் அந்தம் இன்றி, என்றும் உள்ள பொருளாய்,
அளவிடற்கும் அரிதாய், ஒரு மாற்றம் இல்லா வடிவாய்,
சோதியென ஒளிர்ந்திருக்கும் பிரம்மம் ஒன்றே என்றும்,
எள் அளவும் பன்மை அதில் எந்நாளும் இல்லை.

404. **ச**த்தியம், நல் ஞானமுடன், ஆனந்தச் செறிவாய்,
தனக்கு அயலாய் ஏதும் இன்றி, இயக்கமுமே
இன்றி,
நித்தியமாய் நிலைத்து இருக்கும் பிரம்மம் ஒன்றே
என்றும்,
எள் அளவும் பன்மை அதில் எந்நாளும் இல்லை.

405. **அ**னைத்து உள்ளும் நின்று இருக்கும் அயல் இல் ஒரு
பொருளாய்ப்
பூரணமாய், எல்லையின்றி எங்கும் நிறைந்து
இருக்கும்,
தனி வடிவாய்த் திகழ்ந்து இருக்கும் பிரம்மம் ஒன்றே
என்றும்,
எள் அளவும் பன்மை அதில் எந்நாளும் இல்லை.

406. **அ**யலினிலே ஒதுக்குவதும், அணைத்து
மகிழ்வதுவும்
அடைவதுவும் இன்றி, ஓர் ஆதாரம் இன்றி,
இயல்பினிலே தனித்து இருக்கும் பிரம்மம் ஒன்றே
என்றும்,
எள் அளவும் பன்மை அதில் எந்நாளும் இல்லை.

407. **ப**குதிகள் சேர் நிகழ்ச்சி இல்லா வடிவாய்,
நிர்க்குணமாய்,
நுண் பொருளாய் மாற்றம் இல்லா, மரு இல்லா,
உருவாய்த்,
திகழ்ந்து இருக்கும் ஒரு பொருளாம் பிரம்மம் ஒன்றே
என்றும்,
எள் அளவும் பன்மை அதில் எந்நாளும் இல்லை.

408. **அ**றிவினிலே தெளிந்து அறியா, அரிய
இயல்பினதாய்,
அப்பாலாய் மனம், மொழியைக் கடந்து நிற்கும்
பொருளாய்
பிறிது ஒன்றும் தன்னில் இல்லாப் பிரம்மம் ஒன்றே
என்றும்,
எள் அளவும் பன்மை அதில் எந்நாளும் இல்லை.

409. **த**ன்னில் ஒளிர் தெளிந்த வடிவாம், தூய
பொருளாம்,
மெய் அறிவாம், அழி பொருளுக்கு எதிர் மறையாம்
ஒன்றாம்,
இன்னொன்று அங்கு இல்லாத பிரம்மம் ஒன்றே
என்றும்,
எள் அளவும் பன்மை அதில் எந்நாளும் இல்லை.

410. **ப**ற்று அறுத்துப் பொருள் விழையும் பான்மை
விடுத்தவராம்
பேரமைதி நிலைத்தவராம், அலையா
மனத்தவராம்,
நற்றவத்தார் பரம் பொருள் இஃது உணர்வர்,
முடிவினிலே,
மெய் இயல்பை அறிவதனால் பேரின்பம்
பெறுவர்.

411. **பே**ரின்பச் செறிவு எனச் சொல், ஆத்ம இயல்பு
எனும் அப்
பேருண்மை ஆழ்ந்து உணர்ந்து அறிந்தனையாய்,
மனத்தில்
சேர்மயக்கம் நீங்கி, மிக ஒளிர்ந்து, முக்தி பெற்றே,
வாழ்வு இதனைப் பெற்ற பயன் பெற்றிடுவாய்
நீயும்.

412. நல் அறிவுக் கண்ணாலே ஞானம் இதை
அறிவாய்,
நிர் விகல்பச் சூழ்நிலையில் மனம் ஒடுங்க
நிலைத்தே;
சொல்லிய நூற்பொருள் தெளிவாய்க் குழப்பம் அற
உணர்ந்தால்.
மீண்டும் ஒரு சந்தேகம் மோதுவதே இல்லை.

413. அறியாமைப் பிணைப்பு அறவே, ஆனந்த, மெய்,
ஞான
ஆத்மாவை அறிவதற்கு நூற்பொருள் சிந்தனையும்,
செறிபொருள் சேர் குருமொழியும் விளக்கங்களாம்,
தனது
மனம் குவித்துப் பொருள் உணர்தல் அவற்றில்
உயர் நிலையாம்.

414. சிறையுடனே விடுதலையும், நிறைவுடனே
அலைவும்,
உடல் நலமும், பசியும் அவை உடையவரே
தெளிவாய்க்
குறைவு அறத்தம் அனுபவத்தால் அறிவர்; பிறர்
யாரும்
அறிவதெல்லாம் மற்று, வெறும் அனுமானம்
ஆகும்.

415. தனக்கு அயலாய் நின்று இருந்தே குருவும், உயர்
நூலும்
தம் நெறியைச் சேர்ந்தார்க்குப் பொருள் உரைத்தல்
கூடும்
மனத்தினில் மெய், இறை அருளால் நேரில்
உணர்வோர்க்கே,
அறியாமைக் கடல் இதனைக் கடப்பது கை கூடும்.

**416.** **ப**குப்பு இல்லா முழு வடிவாம் தன் ஆத்ம
நிலையைத்
தான் உணர்ந்து குறைகள் இல்லா முழுமை
அடைந்தவராய்,
விகல்பங்கள் அறியாத மனத்துடன், ஆத்மாவின்
நேருக்கு நேர் நின்று, அதிலே ஒன்றி விட
வேண்டும்.

**417.** **அ**னைத்து உலகும், ஜீவனுமே பிரம்மம் - அயல்
இல்லை
முக்தி எனல் பகுத்தல் இல்லாப் பிரம்மநிலை
சேர்தல்;
அனைத்து மறைத் தீர்ப்பும் இதே; பிரம்மன், அயல்
இல்லா
ஒரு வடிவம், எனும் உரைக்கு நூல்கள்
துணையாகும்.

**418.** **ஏ**ற்றம் மிகு நூற் கருத்தும், குருவின் - அருள்சேர்
இனிய மொழி நல் உரையும் ஏற்று,
ஆற்றலுடன் சிந்தையிலே ஆய்ந்து, - புலன்கள்
அடங்கிடவே மனதை ஒருப்படுத்திப்,
போற்றும் ஓர் அருள் நிறைந்த பொழுதில் - ஆத்ம
மெய்ப் பொருளை உணர்ந்தவராய்ச் சலனக்
கீற்றும் இல்லா வடிவினராய் ஆகி - ஆத்மப்
பெரு நிலையில் ஒன்றி நின்றார் சீடர்.

**419.** **உ**ளம் குறித்துப் பிரம்ம நிஷ்டை தனிலே - சிறிது
பொழுது இருந்து, பின் நிறைவாய் எழுந்து
களங்கம் இல்லாப் பேரின்ப நிலையிலே மூழ்கிக்
கலந்தவராய் இவ்வுரைகள் மொழிந்தார்.

**420.** **எ**ன்னதான் நேர்ந்தது இங்கே? எந்தன்
மனமுடன் செயல்கள் ஓயத்,
தன் நிலை கண்டு கொண்டேன் - ஆத்மா
தான் உயர் பிரம்மம் என்றே;

முன், இது இதுதான் இல்லை - என்று
முறை செயல் அறிந்திலேன் நான்;
என்னவோ பெரும் பேரின்பம்? - எல்லை
எவ்வளவோ? அறியேன் நானும்.

421. **எ**ழில் அமுது ஆத்ம இன்பம் - பொங்கும்
பிரம்ம மாக் கடலின் சீர்த்தி,
மொழி எது உரைக்கக் கூடும்? - எந்த
மனம் இதை அளக்கக் கூடும்?
இழிந்தது ஓர் துளிபட்டு உள்ளம் - ஆலங்
கட்டிதான் கடல் சேர்வது போல்,
அழிந்தது - அப் பேரின்பம் - தன்னிலே
அமைந்தது நிறைவு கொண்டே,

422. **எ**ங்கே தான் சென்றது இந்த உலகம்?
எவர் அதை ஒழித்தார் இங்கே?
எங்கு, அது எதனில் சேர்ந்து - தன்னை
இழந்தது முற்றாய் இன்று?
இங்கு ஒரு கணத்தின் முன்னே - கண்ட
உலகு அது, உயிர்த் துடிப்பு
மங்கி, மாண்டு ஒழிந்ததோ? - இம்மாற்றம்
விந்தையின் விந்தை அன்றோ?

423. **பூ**ரண இன்பத் தேனில் - நிறைந்து
பொங்கிடும் பிரம்மக் கடலில்,
தூரவே எறிவது என்ன? - பின்னே
தேடி நான் கொள்வது என்ன?
வேறியல்பு அதற்கு அயலாக - நிலவும்
பொருள் எது உள்ளது இங்கே?
பேர் அவைகளிலும் நான் - வேறாய்ப்
பார்த்திடும் தன்மை என்ன?

424. **எ**தையும் நான் காணவில்லை - இங்கே
எதையும் நான் கேட்கவில்லை;
எதையும் நான் அறியவில்லை - எந்தன்
இயல்பினை அறிந்த பின்னே

இதுவரை அறிந்த வற்றின் - வேறாய்
இன்பத்தின் வடிவாம் ஆத்மா,
அது என இருக்கின்றேன் நான் - இங்கே,
அயல் எதும் அறிதற்கு இல்லை.

425. **போ**ற்றி, என் குருவே போற்றி - வாழ்க்கைப்
பற்றினை வென்றாய் போற்றி;
போற்றுவோர் தாமும் போற்றும் - நிலைத்த
பேரின்ப வடிவே போற்றி;
வேற்று ஒரு பொருள் இல்லாமல் - ஒன்றாய்
விளங்கிடும் மகாத்மா போற்றி;
ஈற்று எதும் இல்லாய் போற்றி - நிறைவாம்
கருணையின் கடலே போற்றி.

426. **ச**ந்திரன் ஒளியைப் போல - என்னைத்
தழுவிடும் அருள்சேர் பார்வை,
தந்து இவ் வுலகின் துன்பம் - தந்த
தளர்ச்சியை அறவே நீக்கி,
எந்த ஓர் மருவும் இல்லா - ஆத்ம
ஈடு இலா இன்பம் தன்னைச்
சொந்தமாய் ஒரு கணத்தில் - நான்
சேர்ந்திடச் செய்தாய் போற்றி.

427. **அ**ருளினைப் பெற்றேன் நானே - வாழ்வின்
அரும்பயன் பெற்றேன் நானே,
இருள் எனச் சூழ் சம்சாரத் - துன்ப
எல்லையை விட்டேன் நானே,
பொருள் செறி நிலைப் பேரின்பம் - நானே
பூரணம், அழியா உண்மை
பெரும் நிலை இதனை அன்பால் - தந்த
பெருமானே, போற்றி, போற்றி.

428. **ஒ**ட்டுதல் ஒன்று இல்லேன் நான் – எந்த
உருவமும் கொண்டேன் இல்லேன்,
கட்டிடும் இலிங்க மேனி - தன்னைக்
கடந்ததாய் இருப்பவன் நான் ;

பட்டு அழியாதவன் நான் - பிறவாப்
பெரும் பேரமைதி நானே,
தொட்டிடும் முடிவு ஒன்று இல்லேன் - நானே
தூய்மை, நான் நிலைத்த உண்மை.

429. **செ**ய்பவன் இல்லை நான், அச் செயலின்
பலன் நுகர்பவனும் இல்லை,
எய்திடும் மாற்றம் இல்லேன் - எந்த
இயக்கமும் கொண்டேன் அல்லேன்,
துய்ய நல் ஞான ரூபம் - என்றும்
தனித்ததோர் வடிவம் நானே
மெய்ப் பொருள் ஆக எங்கும் - நிலைத்த
சதாசிவம் ஆவேன் நானே.

430. **பா**ர்ப்பவன், கேட்போன், இங்கே - பேசும்
வடிவினன், செய்வோன், பலனை
ஓர்பவன் எனும் அவ் உருகள் – அறியும்
உருவங்கள் நீத்தவன் நான்.
சீர்பெற நிலைத்திருக்கும் - இயக்க
நிகழ்வு அற்ற, எல்லை இல்லா,
ஓர் பொருளாய்த் தனித்த - அழியா
முழுமை நல் அறிவாம் நானே.

431. **இ**துவும் நான் இல்லை, மற்றும் - இங்கே
அதுவும் நான் இல்லை ஆனால்
பொதுவிலே அவை இரண்டும் - காட்டிப்
பொலிந்திடச் செய்பவன் நான் :
எதுவும் என் உள்ளே இல்லை - எனக்கு
வெளியிலும் எதுவும் இல்லை
எதிர் இலா முழுமையான - தூய
பிரம்மம் ஒன்றே நான் என்றும்.

432. **எ**னக்கு ஓர் இணையும் இல்லை - நானே
ஆதி இல்லாத உண்மை,
மனத்தில், கற்பனையாய்க் காணும் - நான் நீ
அது, இது என்னும் தோற்றம்

அனைத்தையும் கடந்தவன் நான் - என்றும்
நிலைத்த பேரின்பமான,
புனைவு இலா மெய்மையான - தூய
பிரம்மம் ஒன்றே நான் என்றும்.

433. **ந**ரகாசுரனை வென்ற - அந்த
நாராயணனும் நானே;
புரங்கள் மூன்று எரித்து நின்ற - அந்தப்
புருஷன், ஈஸ்வரனும் நானே;
உரங்கொள் நல் ஞானம் நானே - யாவும்
அறிந்திடும் சாட்சி, என்னைப்
புரக்கும் வேறு இறைவன் இல்லை - என்னில்
நான், எனது என்பது இல்லை.

434. **உ**ள்ள பல் உயிருள் எல்லாம் - ஞான
உணர்வு என இருப்பவன் நான் ;
உள்ளொடு புறம் அவற்றைத் - தாங்கும்
உறுதியாம் ஆதாரம் நான்;
உள்ளது எல்லாம் உணர்வோன் - இங்கே
இது, இது இல்லை என்றே
வெள்ளமாய்ச் சூழ்ந்து முன்பு - பலவாய்
உணர்ந்தவை அனைத்தும் நானே.

435. **நி**லைத்த பேரின்பமாக - என்றும்
நிலைத்திடும் கடலாம் என்னில்,
சலனம் செய் மாயக் காற்று - மோதும்
சிறு விளையாட்டினாலே,
நிலை இலா அலைகளாக - இங்கு
நிகழ்ந்திடும், அழிந்து போகும்,
உலகு எலாம் ஓய்தல் இன்றித் - தொடர்ந்து
ஒன்றன் பின் ஒன்றாய் வந்தே.

436. **உ**ருவமோடு அருவம் என்றே - தவறாய்
உலகினர் என்னைக் காணும்,
உரு எலாம் என்னில் தோன்றும் - மாய
எழுச்சிகள், மெய்யோ அல்ல.

ஒரு பெரும் பகுப்பு இலாத - கால
மூன்றுமையை, யுகங்களோடு
வருடம் பின் பருவ காலம் - திங்கள்,
நாள் எனக் காண்பதே போல்.

437. ஈனமாம் அறிவு கொண்ட - மூடர்
எதனை, எவ்வாறாய்க் கண்டும்,
தாம் அதை ஒன்றினாலும் - தாங்கும்
அடித்தளம் பிறழ்வது இல்லை;
கானல் நீர் வெள்ளமாகப் - பொங்கிக்
கரைபுரண்டு ஓடினாலும்,
வேனில் நாள் பாலைப் பூமி - கொள்ளும்
வேட்கைக்கு நீர் அங்கில்லை.

438. வானமாய் இருப்பவன் நான் - மாசு
படிவதே இல்லை என்னில்;
பானுவாய் இருப்பவன் நான் - ஒளிபெறும்
பொருள்களின் வேறாய் நிற்போன்;
வான் தொடு மலையும் நானே - எந்த
வகையிலும் சலனம் கொள்ளேன்;
நான், அலை கடலும் ஆவேன் - எந்த
எல்லையும் எனக்கு இங்கு இல்லை.

439. வான் செலும் மேகத்தோடு - அந்த
வானம் ஒன்றாததைப் போல்,
நான் இந்த மேனியோடு - எந்த
நிலையிலும் ஒன்றி நில்லேன்;
ஆனதால், மேனி கொள்ளும் - தூக்கம்
கனவொடு, விழிப்பு என்னும்,
ஊனமாம் நிலைகளாலே - எனக்கு
ஊறுகள் ஏதும் உண்டோ?

440. காண்கின்ற மாயத் தோற்றம் - மட்டுமே
வருவதும், போவதும் ஆம்;
பூணும் பல் செயல்கள் யாவும் - அதுவே
புரிந்திடும், பலன்கள் காணும்;

மாண்பினை இழந்து, மக்கி - நொந்து
மடிவதும் அதுவே இங்கே
யாண்டும் ஓர் சலனம் இன்றி - மேரு
மலை என இருப்பவன் நான்.

441. **எ**ன்றுமே வடிவில் ஒன்றாய்ப் - பகுதி
ஏதும் இல்லா எனக்கு,
ஒன்றியே செயல் செய்வதுவும் - நீங்கி
ஓய்தலும் இல்லை என்றும்;
ஒன்று எனத் தன்னில் தானே - நிறைந்த
முழுமையாய், அளத்தற்கு அரிதாய்,
நின்றிடும் வானம்போல - என்றும்
நிலைப்பவர்க்கு இயக்கம் ஏது?

442. **நு**கர்ந்திடும் புலன்கள் இன்றி - அந்த
நினைவு உணர் மனமும் இன்றி,
நிகழ்ந்திடும் மாற்றம் இன்றி - ஒரு
நிலை கொளும் உருவும் இன்றித்
திகழ் பேரின்பம் கண்ட - என்னில்
நேர்வதோ நன்றும், தீதும்?
புகழ்ச்சி சேர் நூலும் சொல்லும் - ஏதும்
படிதல் அங்கு இல்லை என்றே.

443. **நெ**ருப்புடன் குளிரும், நன்றும் - தீதும்
நிழலினைத் தொட்ட போதும்,
வருத்தும் ஒன்று எய்துமோ? - அந்த
நிழல்தனுக்கு உரிய மாந்தர்?
பொருள் நிலை அறியும் சாட்சி - வேறாய்,
மாற்றமும் அலையும் இன்றி,
இருப்பதாம்; தீயும் என்றும் - வீட்டின்
இயல்பினைச் சேர்வது இல்லை.

444. **ம**னிதரின் செயலுக்கு எல்லாம் - ஞாயிறு
சாட்சியாய் இருத்தல் போல
அனல் அது சேர்வது எல்லாம் - போதும்
அறிந்திடாது எரித்தல் போல,

நினைவில் காண் அரவத்தோடு - கயிறு
தொடர்பு கொண்டு இருத்தல் போல,
புணையும் ஓர் மாற்றம் இல்லா - ஆத்மா,
பொலியும் பேரறிவு நானே.

445. செயல்கள் நான் செய்வது இல்லை - பிறரைச்
செயலில் சேர்ப்பதுவும் இல்லை;
நயந்து ஒன்று அறிவது இல்லை; பிறரை
அறிய வைப்பதுவும் இல்லை;
வியந்து நான் காண்பது இல்லை - பிறரைக்
காண வைப்பதுவும் இல்லை;
உயர்ந்த தன் ஒளியில் வாழும் - ஆத்மா
உணர்வு எலாம் கடந்தவன் நான்.

446. நீர் நிலை சலனம் கொள்ள - அந்த
நீருடன் அசைவது எல்லாம்,
சூரிய பிம்பம் மட்டும் - மாறாச்
சூரியன் அசைவது இல்லை;
சேர்நிலை மாற்றம் எல்லாம்- மூடர்
தமது எனக் கருதி இங்கே,
காரியம் செய்பவன் நான் - பலனைக்
காண்பவன், செத்தேன் என்பர்.

447. குடம் அது வெளியில் நிற்கும் - ஆனால்
விண்வெளி எந்த நாளும்,
குடத்து அமை குணங்கள் எல்லாம் - தன்னில்
கொள்வதே இல்லை போலச்,
ஞா உடல் நீரில் அன்றி - இங்கே
நிலத்திலே வீழ்ந்த போதும்
உடல் இதன் இயல்பினோடு - என்றும்
உடன்பாடுவது இல்லை நானே.

448. இயக்கமும், அதன் விளைவாம் - பலன்
நுகர்ச்சியும், சூழ்ச்சியும், கள்
மயக்கமும், மந்தமும், பேர் - பிணைப்பும்,
விடுவதும், புத்தி கொள்ளும்

இயல்புகள் எந்த நாளும் - எங்கும்
நிறைந்த நல் முழுமையான
அயல் இலாப் பிரம்மம் என்னும் - ஆத்மா
தனில் அவை இருப்பது இல்லை.

449. பத்து, நூறு ஆயிரங்கள் - என்றே
பிரகிருதி கொள்ளும் மாற்றம்,
எத்தனை ஆன போதும் - என்றும்
எவ்விதச் சார்பும் இன்றிச்
சித் வடிவு ஆயிருக்கும் - என்னைச்
சேருமோ அவைகள் யாவும்?
எத்தனை முயன்ற போதும் - என்றும்
மேகம், வான் தொடுவது இல்லை.

450. வெளிப் படாது இருக்கும் மாயை - தொடங்கி
மேனியின் வரைக்கும் இங்கே,
ஒளிர்ந்திடும் உலகு அனைத்தும் - தன்னில
நிழல் எனத் தாங்கி, வான
வெளி என அதி சூட்சுமமாய் - நேரும்
ஆதியோடு அந்தம் இன்றி,
விளங்கிடும், இருமை இல்லா - அந்த
ஒருமையாம் பிரம்மனே நான்.

451. அனைத்தையும் தாங்கி நிற்கும் - அதுவே
அனைத்தையும் ஒளிர்ப்பது ஆகும்
அனைத்து உருவானது ஆகும் - அதுவே
அனைத்திலும் இருப்பது ஆகும்.
புனைந்திடும் பன்மை இன்றிச் சலனம்
அற்றதாய், நிலைத்த தூய்மை,
நினைத்துணை இருமை இல்லா - அந்த
ஒருமையாம் பிரம்மனே நான்.

452. வகை வகையாகத் தோன்றும் - மாய
வரம்பினைக் கடந்தது ஆகும்;
அக வடிவு ஆனதாகும் - அறியும்
உணர்வினைக் கடந்தது ஆகும்

தகைமையில் சத்தியம், ஞானம் - எல்லை
அறிந்திடா இன்பம் ஆகும்;
பகை சொல்ல இருமை இல்லா - அந்த
ஒருமையாம் பிரம்மமே நான்.

453. **எ**ந்த ஓர் செயலும் இல்லை - என்னில்
ஏதுமே இல்லை மாற்றம்
எந்த ஓர் உறுப்பும் இல்லை; - எனக்கு
எவ்வித வடிவும் இல்லை;
எந்த ஓர் மருவும் இல்லா - முழுமை
இயல்பு நான், நித்தியம் நான்
எந்த ஓர் ஆதாரம் தான் - இல்லா
இரண்டு இலா ஒருமையே நான்.

454. **எ**ங்குமே உள்ளவன் நான் - உள்ள
எல்லாமே நானே ஆவேன்
எங்கும் ஓர் அயல் இலாதான் - நானே
அனைத்தையும் கடந்த கோலம்;
பொங்கிடும் முழுமை நானே - தனித்த,
பூரண ஞானம் நானே
தங்கு தடை இல்லாத - நொடியும்
தளர்ந்திடா இன்பம் நானே.

455. **எ**ன்னிலே ஞானத் தீபம் - ஏற்றி,
இருள் அறச் செய்தாய் போற்றி,
நின் நெறிக் கருணையாலே - இந்த
நலம் எனைச் செய்தாய் போற்றி,
மன்னனே, குருக்களுள்ளே - ஓங்கும்
மாமணிச் சுடரே போற்றி,
பொன் மனச் செம்மலே, நின் - தூய
பதமலர் போற்றி, போற்றி.

456. **இ**ருள் செறி பிறப்பு, இறப்பு - என்னும்
வனத்தினை வழி மறந்து,
பெரும் பயம் தரும் அகந்தை - என்னும்
புலியினால் துரத்தப்பட்டு,

வருந்திய, முடிவு இலாத - கனவு
வாழ்க்கையின் உறக்கம் நீங்கக்
கருணையால் விழிப்பை நல்கி - என்னைக்
காத்தனை அருளினாலே.

457. **சொ**ல்லிலே விளக்க ஒண்ணா - உயர்வாய்,
நிலைத்த ஒரு வடிவே போற்றி,
வல்ல, பல் ஆசானுள்ளும் - அரசாய்
விளங்கிடும் சுடரே போற்றி;
எல்லை இல்லாத வையம் - யாவும்
இயல்பில் நின் விஸ்வரூபம் ;
நல் அடி போற்றி, போற்றி - எந்தன்
நாதனே போற்றி, போற்றி.

458. **நி**ன்று, நிலைத்த மெய் உணர்ந்தே, நெஞ்சில்
நிறைவு மிக அடைந்து,
ஒன்றி, நல் ஆத்ம இன்பம் நுகர்ந்த
உணர்வில் திளைத்தவராய்,
நன்றியுடன், தன் நல் அடி தொழுது
நின்றிடும் சீடர்கண்டு,
அன்பு ததும்பிடும் நெஞ்சினராய்க் குரு
அருளிய வார்த்தை இது.

459. **உ**லகம் அனைத்தும், தொடர்ந்து எழும் பிரம்மத்
தோற்றமே; அதனால், எவ்வகை யாலும்
உலகம் அனைத்தும் பிரம்மமே; இதனை
ஞான விழியினால், அமைந்த மனத்தில்
நிலை எது வரினும் நன்கு அறிவாய்; விழி
உடையவர் உரு அன்றி எதை பிற காண்பர்?
நிலை என்ன, அறிவினில் மெய் உணர்ந்தோர்க்கே-
பிரம்மனை அன்றிப் பொருள் அறிவதற்கே?

460. **நெ**ஞ்சிலே, பரம சுகம் நிறைந்து இருக்க,
நில்லாச் சுகந்தனை விழைவரோ அறிஞர்?
கொஞ்சு எழில் மதி தான் நேர் ஒளிர்ந்து இருக்க,
ஓவிய மதியினை உளம் விரும்பிடுமோ?

கொஞ்சமும் நிறைவும், துயர்க்கு ஒரு மாற்றும்,
இல்லை, பொய்யாம் பொருள் எவையாலும்,
விஞ்சு பேரின்பமாம், இணையிலா ஒரு மெய்,
கண்டு, அதில் நிறைவாய்க் கலந்து ஒன்றிடுவாய்.

461. **ஆ**த்மா ஒன்றையே காண்க எந்நாளும்;
ஆத்மா ஒன்றையே சிந்தையில் அறிவாய்;
ஆத்ம, இணையிலாப் பெருமகிழ்வு அதனில்,
கலந்து வாழ்வை நீ நடத்திடல் வேண்டும்,
ஆத்ம முழுமையாம் அறிவினில் காணும்,
அயல் எதும் வானிடைக் கோட்டை போல் ஆகும்
ஆத்ம இணையிலா மகிழ்வினில் ஒன்றிச்
சாந்தியாம் மோனச் சமநிலை பெறுவாய்.

462. **ப**ல்வகைக் கற்பனை எழும் மனம் ஒடுங்கிப்
பேரமைதி பெறும் பிரம்ம வித்தகர் தாம்,
நல் அமைதியிடைப் பிரம்மனோடு ஒன்றி,
இணையிலா இன்ப நிறைவினில் நிலைப்பர்;
எல்லையில் ஆத்ம இன்பமே நுகர்ந்து,
தன் இயல்பு அறிந்த தகைமை கொண்டோர்க்குத்
தொல்லையாம் வாசனைத்தளை அறும், மோனத்
தனி நிலைக்கு இணையாய் இனிமை ஒன்று
இல்லை.

463. **இ**ருப்பதும், போவதும், அமர்வதும், படுப்பதும்,
நிலை எதுவாயினும், ஆத்ம நற் சுகமே,
விரும்பிடும் முனிவர் இயல்பினில் இருப்பர்;
மெய்யறிக உணர்ந்த மேன்மை கொள்வதனால்,
ஒரு குறை அறியா மனத்தவர் யாரும்,
இடம், பொருள், காலம்,நிலை,நெறி திசை தமைக்
கருதுவது இல்லை; தன் இயல்பு அறியத்
தகுதிகள் ஏதும் வகுத்தலும் உண்டோ?

464. நேர்ப்படு பொருளின் நிலை அறிவதற்கு
உதவிடும் புலன் அது குறை எதும் இல்லாச்
சீர் பெறல் வேண்டும்; இது குடம் என்றே
அறிந்திட வேறு என்ன அடைந்திட வேண்டும்?
ஓர் நிலை மெய்யாம் ஆத்மா, தன்னை
உணர்த்திடும், சீரிய அறிவு எனும் நெறியைச்
சேர்கையில்; இடமும், காலமும், இயைந்த
தூய்மையும் அந்நிலை தருவது இல்லை.

465. நான் சதாசிவன், என்னும் உணர்வது, சூழும்
நிலைகளைச் சாராது இருப்பது போல,
மேன்மை கொள் பிரம்ம மெய் உணர்ந்தோரும்,
தானே பிரம்மன் எனத் தெளிந்து அறிவர்;
தான் நிலை இல்லாப் பொய்யாம், அற்ப
உலகம் அனைத்தும் ஒளிர்ந்து விளங்கப்
பானுவைப் போலப் பொலிந்து, ஒளி நல்கும்
பொருளை விளக்கப் பொருள் எதும் உண்டோ?

466. மறையுடன் சாத்திரம், புராணம் யாவும்
மலிந்த பல் உயிரும் பொருள் பெறுமாறு,
நிறைந்து விளங்கும் நிலைத்த உட்பொருளின்
நிலையினை வேறு எதும் விளக்குவது உண்டோ?
குறை அறிவு அறியா, அனைவரின் அனுபவம்
தான் ஒளிர் ஆத்மத் தனிப்பெரும் சக்தியை,
நிறைந்து அறிந்தே, சிறை நீங்கி, நிகர் இலாப்
பிரம்ம ஞானியர் பெரும் வாழ்வு அடைவர்.

467. பெருமிதம் இன்றி, செருக்குமும் இன்றிப்
பொருளினை விருப்பமும், வெறுப்பும் இங்கு
இன்றிப்
பருகிடும் பேரின்ப ரசத்தினில் நிறைந்து,
விரும்பி, நல் ஆத்ம நிலைதனில் நிலைப்பர்;
வருத்திடும் பசியும், வலியும் மறந்து
விளையாடும் சிறு குழந்தையைப் போல,
கருக்கொளும் நான், எனது எனும் உணர்வு இன்றி
மகிழ்வினில் திளைப்பர் மெய் உணர் அறிஞர்.

468. **க**வலையும், இழிவும் கருத்தில் கொள்ளாது,
ஏற்ற பிச்சையே அவர்க்கு உணவாகும்;
நவநதி நீரால் நாவேட்கை அறும்;
சுதந்தரமாய்த் தனித்து ஒரு பயம் இன்றி,
உவந்து உறங்கும் இடம் மயான, வனங்கள்;
அணிவது மரவுரி, அன்றி மேற் சருமம்
அவரது தலையணை பூமி வேதாந்த
வீதியில், பிரம்மம் அவர் விளையாட்டு

469. **பு**றத்தினில் எவ்வொரு குறியும் இல்லாது,
பொருள் வழிப் பற்றினைத் துறந்தவர் ஆகி,
உறவு இன்றி, உடலுடன் ஒட்டி நின்றவராய்,
வகை பலவாக வரும் பொருள் அனைத்தும்,
பிறர் விழைவினுக்காய்ப் பொருந்தி நுகர்ந்து,
வருகின்ற போகின்ற நிலை நினையாது
சிறப்புற ஆத்மச் சிறப்பினை உணர்ந்தோர்
சிறு குழந்தை போல் இருப்பர் எந்நாளும்.

470. **மே**லுடை இன்றிச் சிலபொழுது இருப்பார்,
மணி, அணி சூடியும் மகிழ்ந்து இருப்பார், பின்பு
தோலுடன் மரவுரி தரித்து இருப்பார், உயர்
தனிப்பெரும் ஞானத்தில் நிலைப்பவர், பிசாசைப்
போலவும் உலகினில் பயம் இன்றித் திரிவார்,
பச்சை குழந்தையைப்போலவும் சிரிப்பார்;
ஓலமிட்டு ஒரு நாள் பித்தனைப் போல,
உலகினை மறந்தோர் உணர்விலும் திளைப்பார்.

471. **வி**ருப்பம் இல் நிலையாய் உயிர் வாழ்ந்து இருந்து,
வரும் பொருள் மகிழ்ந்து, தன் இயல்பினிலே,
திருப்தி கொண்டோராய், யாவும் தானாகிப்
பெரும் மகிழ்வு அருந்தும் மெய் அறிதுறவோர்,
பெரும் தவ ஞானியாய், மூடராய், அரசராய்,
இருப்பராம், மலைப்பாம்பு எனவே அசையாது
இருப்பராம், அலைவராம், பெருமையும், சிறுமையும்
பெறுவராம், அருள்வராம், மறைந்துமே
இருப்பராம்.

472. செல்வம் அற்று இருந்தும் செல்வராய் வாழ்வர்,
சேர்துணை இன்றியும் வலிமிகுந்து இருப்பர்;
பல்பொருள் இன்றியும் பெரும் நிறைவு அடைவர்,
சமம் ஒன்று இன்றியும், சம நோக்கு உடையவர்;
இல்லை ஓர் இயக்கம், இயங்கி நின்றாலும்,
ஏற்பது இல்லை, வினைப் பயன் நுகர்ந்தாலும்;
செல் உடல் பெறினும் சேர்வது இல்லை, அதன்
எல்லையுள் நின்றுமே, எங்கும் நிறைந்தவர்.

473. நன்றுடன் தீதும், மகிழ்வுடன் துயரும்,
மேனியைத் துறந்த பிரம்ம ஞானியை
ஒன்றுவது இல்லை என்றுமே; உடலை
வளர்த்து அதன் சிறப்பில் திளைத்து
இருப்போர்க்கே
நன்றுடன் தீதும், மகிழ்வுடன் துயரும்;
நன்மையும் தீமையும், நல்கிடும் பலனும்,
ஒன்றுவது எப்படி, தன் தனை நீக்கி,
ஒரு மெய்யினையே உ[illegible]டுவோர்க்கே?

474. பரிதியை இராகு பற்றுவதாய் எழும்
காட்சி மெய் அல்ல; பரிதியின் இயல்பைச்
சரிவர அறியார், அறியாமையினால்
கதிரினை இராகு கவ்வியது என்பர்.
திரிபு அறப் பிரம்மத் தத்துவம் உணர்வோர்
தம் உடல் தனை விட்டு நீங்கிய போதும்,
தெரிந்திடும் உடலினை அவர் தாங்குவதாய்க்
கருதுவர் மூடர் கலக்கத்தினாலே.

475. உடலினைத் துறந்தவர், உயிர் வாழ்ந்து இருப்பர்,
உதித்த சட்டையை உதறிய பாம்பாய்,
கடமையில் பிராணன் காட்டிய வழியில்
உடல் அது அசையும், இடம் பல தேடி

தடத்தினில் எதிர்ப்படும் மரங்களை, வெள்ளம்
மேட்டிலும், மடுவிலும் சேர்த்திடல் போல
உடலையும் பழவினை வெள்ளம், பலனிடை
உரிய பொழுதினில் சரிவரச் சேர்க்கும்.

476. **ப**ழவினைத் தொடராம் பிராரப்த கர்மம்,
வழங்கிடும் விழைவால், மெய் உணர்ந்தோரும்
உழலும் சம்சார உலகினர் போலப்
புலன் மகிழ்வின் இடை உடல் உணர்வு இன்றிப்
பழகுவர் ஆயினும், பார்த்திடும் சாட்சியாய்ப்
பக்குவமாய், மனப் பதற்றம் இல்லாமல்
சுழலும் சக்கரத்தின் அச்சாணி போல,
அலையும் உடலினில் அசையாது இருப்பர்.

477. **ப**ருகிடும் ஆத்மானந்த மயக்கத்தின்
பரவசத்தில் மனம் திளைப்பதனாலே
பெரும் செயல் பலன்களைக் கருதி, எந்நாளும்
வருந்துவது இல்லை, மெய் அறி துறவோர்.

478. **நி**லை அதைச் சேர்தலும், நீங்காது இருப்பதும்
நினையாது, என்றும் தனிப் பேராத்ம
நிலை தனில் வாழ்வோர், பிரம்மனை அறிந்த
உத்தமரில் உயர் சிவனே ஆவர்.

479. **பி**ணைப்புக்கள் நீங்கப், பிரம்மம் நன்கு
உணர்ந்தோர்
இயல்பாய் என்றும் இருக்கும் பிரம்மனில்
இணைந்து கலந்தே எய்துவர் முக்தி;
இப் பிறவியின் பயன் என அதைப் பெறுவர்.

480. **வே**டம் இட்டாலும், வேறு பட்டாலும்,
நடிகர் எந்நாளும் ஒருவரே, அதுபோல்
ஈடு அறு பிரம்ம இயல்பை நன்கு உணர்ந்தோர்,
பிரம்மமே ஆவர், பிறிது எதும் இல்லை.

481. ஒற்றுமை பிரம்மனோடு உணர்ந்த நல் துறவோர்
உடல் அதை, ஞான நெருப்பு அதன் ஜுவாலை
பற்றி எரித்த பின், காற்றினில் அலையும்
இலைச் சருகு என அது எங்கு வீழ்ந்தால் என்ன?

482. என்றுமே அழியா இன்பமாம் பிரம்மம்
ஒன்றினில் நிலைப்போர், மாமிச மலங்கள்
ஒன்றிய தோலுடை உதறிட நன்றாம்
இடமும், காலமும் நாடுவது இல்லை.

483. உடல் தனைத் துறத்தலும், தண்டம், கமண்டல
உதவிகள் துறத்தலும் விடுதலை அல்ல;
இடர்தரும் இதயப் பிணைப்பு, அறியாமை
இயல்பினைத் துறத்தலே விடுதலை ஆகும்.

484. ஓர் இலை ஓடையில் , ஓர் இலை நதியில்
ஓர் இலை சிவதலத்தில், ஒன்று தெருவில்
சேர்வதால், என்ன நன்மையும் தீமையும்
சேர்ந்திடும் அவற்றைச் சேரா மரத்தை?

485. மேனியும், புலன்களும் , பிராணனும், மனமும்
அழிவது, இலை, மலர், கனி அழிவது போல்
தான் ஒரு மரமாய்த் தனித்த மெய், இன்ப
இயல்பாம் ஆத்மா அழிவதே இல்லை.

486. உள் உணர்வாகிய ஒரு பொருள் இது. என
ஆத்ம இயல்பினை உரைத்திடும் நூலும்
தெள்ளிதில் அதன் நிலைத் தன்மையை விளக்கித்
தோன்றிடும் பொய் மட்டும் அழிவதைக் காட்டும்.

487. 'அழிவு இலா ஒரு பொருள் ஆத்மா ' என்றே
அறைந்திடும் நூலும், அவ்வுரை மூலம்,
அழிவதும், சிதைவதும் ஆகிய பொருளிடை
அழியா ஆத்மப் பெருநிலை விளக்கும்.

488. **ம**ரம், கல், புல், நெல் எனும் அவை யாவும்,
எரிந்த பின் சாம்பலாய் எஞ்சிடும், அது போல்,
பரம் அறி நெருப்பிடை, உடல், புலன், பிராணன்
மனம் அவை பட்டிடப் பரமாத்மன் ஆகும்.

489. **சூ**ரிய ஒளியினும் வேறாம் இருளும்,
சூரிய ஜோதி முன், சென்று அழிவது போல்,
பேரியல்பு ஆகிய பிரம்மனின் முன்னே,
பார்த்து அறி உலகும், போய் ஒழிந்திடுமே.

490. **கு**டம் நிறை வெளி அது, குடம் உடைகையிலே,
பரந்த விண் வெளியாய்ப் பொலிந்திடல் போலத்
தொடர்ந்திடும் தோற்றத் தளைகள் ஒழியப்
பிரம்மனை அறிந்தவர் பிரம்மனே ஆவர்.

491. **பா**லுடன், பாலும், நெய்யுடன் நெய்யும்,
நீருடன் நீரும், கலந்து ஒன்றாவது
போலவே, ஆத்மப் பொருள் உணர் துறவோர்,
ஆத்மனோடு ஒன்றாம் அந்நிலை பெறுவர்.

492. **மே**னியைத் துறந்த மேன்மை கொள்வதனால்,
ஒருமையாம் தனிமையை உணர்ந்தவராக,
ஊனம் இல் பிரம்ம உயர்வினில் நிலைப்போர்,
மறுபடி பிறப்பினை பெறுபடல் இல்லை.

493. **அ**றியாமை முதல் மூவகை உடலும்,
எரிபடப் பிரம்ம, ஆத்ம ஐக்கியம்
அறிபவர், நெருப்பாம் பிரம்மனே ஆவர்
பிரம்மனுக்கு ஏதும் பிறவிகள் உண்டோ?

494. **சி**றையுடன், விடுதலை மாயையின் காட்சி,
மெய்ப் பொருள் ஆத்மனில் இருப்பதே இல்லை;
உறைந்திடும் பாம்பின் தோற்றமும், மறைவும்
இல்லை அக் கயிற்றில் - இல்லை ஓர் மாற்றம்.

495. திரை ஒன்று இருப்பினும், இல்லாது இருப்பினும்
பந்தமும், மோட்சமும் பேசிடக் கூடும்,
திரை இட வேறொரு பொருள் இலா ஒன்றாம்,
பிரம்மனை மறைக்கத் திரை எதும் இல்லை;
திரை எதும் இருந்தால், பிரம்மனின் இயல்பாம்
அயல் இலாத் தன்மை அவதியுற்று அழியும்;
உரை பல கூறிப் பிரம்மம் ஒன்றாம், என
உயர்வு சொல் நூலும் அந்நிலை பொறுக்காது.

496. கண்மறை முகில் இடைக் கதிர் மறைவது எனக்
காண்பது போல், நிறை ஒரு தனி ஞான
உண்மையாம் பிரம்மனில், புத்தியின் குணங்களாம்
பந்தமும், மோட்சமும் பார்ப்பராம் மூடர்.

497. நிலைப் பொருள் தனில், தளை இருக்கிறது
என்பதும்.
இல்லை என்பதும், இரண்டுமே அறிவின்
நிலைகள் மட்டுமே; நிலைத்த மெய்ப் பொருளாம்
பிரம்மனில் என்றுமே இருப்பதே இல்லை.

498. ஆகவே தளையும், தளை விடுப்பதுவும்
மாயையின் தோற்றம், ஆத்மனில் இல்லை;
ஏகமாய்க் கூட ஓர் எல்லை இங்கு அறியா,
வெளியினைத் தடுத்திடும் பொருள் இலாதது
போல்,
பாகம் ஒன்று இன்றிப்பெரும் உயர் சாந்தியாய்,
குறைகளும், குற்றமும், இயக்கமும் இன்றி,
ஏகமாய், எங்கும் நிறைந்த மெய்ப் பொருளில்,
எவ்விதம் தளை எதும் இருந்திடக் கூடும்?

499. இலை ஒரு மரணம், பிறப்பும் இல்லை,
இலை ஒரு சிறை, அதில் வருந்துவோர் இல்லை;
இலை முக்தி விழைபவர், முக்தரும் இல்லை,
இதுவே மிக உயர் நிலைப்பொருள் உண்மை.

500. குறைகள் சேர்த்திடும் கலிவிடுத்தவனாய்க்
காமம் வென்றதோர் கல் மனத்தினனாய்,
முறையில் முக்தியை விழைபவன் என்றே,
கருதி, மைந்தனாய்க் களிப்புடன் ஏற்று,
நிறைந்த வேதாந்தக் கருப் பொருளாய், உயர்
வேத மலையின் விண்தொடும் சிகரமாய்,
உறைந்த மாபெரும் இரகசியம் இதனை,
உனக்குப் பலமுறை விளக்கி இங்கு உரைத்தேன்.

501. இவ்விதமாய்க் குரு உரைத்த வார்த்தை கேட்டு,
இயல்பினிலே பக்தியுடன் தாள் பணிந்து,
கவ்விய, தன் தளை நீங்கிக் களிப்புற்றவராய்க்
கருணை அவர் ஆசி பெற்றுச் சென்றார் சீடர்.

502. மெய் இன்பப் பெரும் கடலில் மனம் குளிக்க,
மேன்மை மிகப் புவி அனைத்தும் தூய்மை
பெற்று
உய்தி பெற நல் ஆசி அருள் செய்தவராய்,
உலகினராம் குருவும் பேருணர்வில் நின்றே.

503. இவ்விதமாய்க் குருவும், அவர் சீடர் தாமும்,
ஏற்றமுடன் நிகழ்த்துகின்ற உரையினாலே,
வெவ்வினையை விட விழைவோர் விளங்கிக்
கொள்ள
ஆத்மாவின் இயல்பு அதுதான் சொல்லப்பட்டதுவாம்

504. முறையினிலே மனம் திருந்தி, முக்தி வேண்டி,
உலகு இயல்பை வெறுத்தவராய், உள்ளம் சாந்தி
நிறைந்தவராய், நற்பொருளில் மகிழ்வு கொள்வோர்
நல் துறவோர் நல் உரையின் நலத்தைக் காண்க.

505. மூவகையாம் துயர் என்னும் கதிர் எரிக்க,
மனம் கலங்கிச் சம்சாரத்து இடை உழன்று,
நாவரண்டு பாலையிலே நீரைத் தேடி
நலிந்தவர்க்கு வழி காட்டி, வீடு நல்கிய

சாவு அறுக்கும் அமுதம் அன்றி வேறு அல்லாத,
பிரம்மமாக் கடலினிலே சேர்த்தல் வேண்டிக்
காவலனாம் சங்கர பாரதி தான் இங்கே,
வெற்றி கொட்டி விரித்து உரைத்த வார்த்தை
ஈதாம்.

506. சங்கர பாரதி, வெற்றி முழக்கிச்
சாற்றிய மொழியைச் செந்தமிழ்ப் படுத்திப்
பங்கம் இல்லாமல் படைத்தனன் நானும்
பேரருளாம் அவன் பதமலர் தொழுதே;
எங்கும் வாழ் பரம் பொருள் இயக்கியதாலே,
ஸ்ரீதர பாரதி செய்த இப்பணியில்,
தங்கிய குறைகள், தவறுகள் எனது
தகைமைகள் இருந்தால் அவன் திருவருளே.

ஓம்! ஓம்!! ஓம்!!!

ஓம்

# சொற்பொருள் விளக்கம்

| | |
|---|---|
| அகண்ட | பிரிவில்லாத |
| அந்தகர் | குருடர் |
| அமைதி மற்றும் ஐந்து குணங்கள் | |
| சம | மன அமைதி |
| தம | புலனடக்கம் |
| உபரதி | சலனமில்லாமை |
| திதிக்ஷா | துன்பங்களை ஏற்கும் தன்மை |
| சிரத்தை | அக்கறை |
| சமாதானம் | மனம் அடங்கிய நிலை |
| அயல் | ஆத்மாவுக்கு அயல், அறியாமை |
| அவா | ஆசை |
| அவிர்ப்பலி | வேள்வியில் இடும் பலி |
| அறிவுறுப்பு | ஞான இந்திரியங்கள் |
| அறுவகைத் துன்பம் | பிறத்தல், வளர்தல், மாற்றமடைதல் நசித்தல், நோயுறுதல், இறத்தல். |
| ஆசான் | குரு, ஆசிரியர். |
| ஆடி | கண்ணாடி |
| ஆற்றுவென் | செய்வென் |
| ஆற்றார்க்கு | துன்பப்படுபவர்களுக்கு |
| இயம்பி | கூறி |
| இரஜோ குணம், இராஜஸம் | இயக்கும் சக்தி |
| இலிங்க சரீரம் | நுண்ணுடல், சூக்ஷ்ம உடல் |
| இளவேனில் | வசந்த காலம் |
| இன்நிலை | இன்பநிலை, ஆத்மநிலை |
| உய்வழி | உய்யும் வழி, ஆன்மீக நெறி |

| | |
|---|---|
| உருத்தரும் | தோன்றச் செய்யும் |
| உள்ளல் | ஆசை |
| உறைகள் | திரைகள், கோசங்கள் |
| ஊழ் | விதி |
| ஊறு | கேடு |
| ஏகம் | ஒன்று |
| ஏலும் | இயலும் |
| ஐக்கியம் | ஒற்றுமை |
| ஐந்து திரைகள் | பஞ்ச கோசங்கள் |
| ஒண்ணாதது | முடியாதது |
| ஒறுத்தல் | விடுத்தல், மறுத்தல் |
| கசடற | குறையின்றி |
| காரிய உறுப்பு | கர்ம இந்திரியங்கள் |
| கீர்த்தி | பெருமை, புகழ் |
| குமைந்து | மிக்க வேதனையுடன் |
| கோடல் | கொள்ளுதல் |
| சஞ்சலம் | குழப்பம் |
| சமைந்த | தோன்றிய |
| சவிகல்பம் | புற உணர்வுடன் கூடிய |
| சளைத்தல் | சோர்வடைதல் |
| சாயல் | நிழல், பிரதிபலிப்பு |
| சித் | ஞானம் |
| சிதைத்தற்கு | அழிப்பதற்கு |
| சுயம் | ஆத்மநிலை |
| சூன்யம் | வெறுமை |
| செறிந்த | முழுமையான |
| ஞாயிறு | சூரியன் |
| தண்மை | குளிர்ச்சி |
| தன் இயல் | ஆத்ம நிலை |
| தமோகுணம், தாமஸம் | மறைக்கும், மயக்கும் சக்தி |

| | |
|---|---|
| தரு | மரம் |
| தளை | விலங்கு |
| திண்மை | உறுதி |
| திரிந்திடும் | மாறும் |
| துணித்திடும் | அறுத்திடும் |
| துய்யாத்மா | தூய ஆத்மா |
| துய்த்து | அனுபவித்து |
| துயில் | தூக்கம் |
| துர்வாசனை | தீய எண்ணங்கள் |
| தூலம் | ஸ்தூலம், ஜடம் |
| தேசு | தேஜஸ், பிரகாசம் |
| தொன்மை | பழமை |
| தோற்றிடும் | உருவாக்கும் |
| நச்சி | விரும்பி |
| நசிக்கும் | அழியும் |
| நசை | ஆசை |
| நண்ணிடும் | தோன்றிடும் |
| நனி | மிகுதி |
| நமன் | இயமன், மரணம் |
| நயந்து | விரும்பி |
| நவில் | சொல்லும் |
| நிட்டை | நிஷ்டை, தியானம் |
| நிணம் | கொழுப்பு, தசை |
| நியமம் | தூய்மை, மனநிறைவு முதலிய நெறிகள் |
| நிர்க்குணம் | குணங்களற்ற |
| நிர்விகல்பம் | புற உணர்வு இல்லாத |
| நில்லா | நிலையில்லாத |
| நிலவு | சந்திர ஒளி |
| நுகர்ந்து | அனுபவித்து |

| | |
|---|---|
| பகுத்தறிவு | பொய், மெய் பிரித்தறியும் விவேகம் கூடிய அறிவு |
| பயந்திடும் | கொடுத்திடும் |
| பரம் | பரம்பொருள், பிரம்மம் |
| பரிதி | சூரியன் |
| பழுதை | கயிறு |
| பானு | சூரியன் |
| பிணைப்பு | பிறவித் தளை |
| பிரகிருதி | இயற்கை, புற உலகம் |
| பிரம்மன் | நான்முகன் |
| பிராணன் முதலியன | உயிர்மூச்சின் ஐவகை நிலைகள் |
| பிராரப்தம் | முன் பிறவிகளின் வினைப் பயன் |
| பிறழ்தல் | விலகுதல், நீங்குதல் |
| புரக்கும் | காக்கும் |
| புன்மை | தாழ்மையான |
| பொறை | பொறுமை |
| மடமை | அறியாமை |
| மடு | ஆழமான நீர்நிலை |
| மணிக்குவை | நிதி, புதையல் |
| மறு | குறை, களங்கம் |
| மருள் | மயக்கம் |
| மறை | வேதம் |
| மன் | நிலைத்த |
| மாலுற | மயக்கமுற |
| மாறு | வேறுபாடு |
| முத்தி | முக்தி |
| முந்நிலை | விழிப்பு, கனவு, உறக்கம் |
| மெய் | உண்மை, உடல் |

| | |
|---|---|
| யமம் | அகிம்சை, உண்மை பேசுதல் முதலிய நெறிகள் |
| மௌடீகம் | முட்டாள் தனம் |
| யோகம், சாங்கியம் | பல்வகைத் தத்துவ நெறிகள் |
| வண்ணமாய் | தெளிவாய் |
| வாசனை | எண்ணங்கள் |
| வாதில் | வாதத்தில் |
| விகல்பம் | வேற்றுமை |
| விண்டிடா | விளக்க முடியாத |
| வித்தகர் | ஞானியர் |
| விளிம்பு | எல்லை |
| வீடு | முக்தி |
| வெருட்டும் | அச்சமூட்டும் |
| வெளி | ஆகாயம் |
| வேட்கை | ஆசை, தாகம். |
| வைராக்கியம் | விரக்தி, மன உறுதி |
| ஜடம் | உயிரற்ற, தனித்து இயங்காத |
| ஜீவன் | ஜீவாத்மா, அறிவு |
| ஸ்திதப் பிரக்ஞர் | பரம்பொருளில் நிலைத்த உணர்வினர் |

# இந்நூல் ஆசிரியரைப்பற்றி...

ஸ்ரீதர பாரதி என்னும் திரு. கோ. வி. ஸ்ரீதரன் அரசுடைமை வங்கியான பேங்க் ஆப் இந்தியாவில் அதிகாரியாக பணி புரிகிறார். நாற்பத்தி நான்கு வயதான இவர் பள்ளியிறுதி வகுப்பிலிருந்து கிட்டத்தட்ட முப்பது ஆண்டுகளாக தமிழிலும், ஆங்கிலத்திலும் கவிதை படைத்து வருகிறார். இருந்த போதிலும் இதுவே புத்தக வடிவில் வெளிவரும் இவரது முதல் நூல்.

பஜகோவிந்தம் (ஆங்கிலம், தமிழ்), செல்வ மறை (கனகதாரா ஸ்தோத்திரம் தமிழ்) அன்னபூர்ணாஷ்டகம் (தமிழ்) முதலிய மொழி பெயர்ப்புக்களும், பல பக்திப் பாடல்களும் இவரது பிற படைப்புக்கள்.

இவரது தந்தையும் ஒரு கவிஞர் என்பது குறிப்பிடத்தக்கது.